# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 ★ இதழ் 7

சித்தார்த்தி ஆண்டு

வைகாசித் திங்கள்

10—6—79



நான்மறையின்

தனித்துணையாம்

ஞானத்தின்

திருவுருவம்



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

ஸ்ரீ குருஞானசம்பந்தர்

அருள்வாக்கு

—★—

எல்லார் கருத்தும்
இதமா உரைக்கறியேன்
நல்லாங்கு தீங்கிதென
நாடறியேன் — எல்லாரும்
நீருரும் வேணி
நிமலா மதுரையில்வாழ்
ஆரூரா சொக்கநாதா.

— சொக்கநாத வெண்பா. 53

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்.

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 | 10-6-79 | இதழ் 7

## உட்பொருள்

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 38 | சித்தார்த்தி - வைகாசி - 10—6—79 | இதழ் 7

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# சைவத்தின் முதல் ஆசாரியர்

**பேரின்பச்சோதி :-**

புண்ணியப் பதினாறு ஆண்டு எய்திய புகலி வேந்தராகிய திருஞானசம்பந்தர் கொள்ளிடத்தின் தென்கரையில் விளங்கும் ஆச்சாள்புரத்தில், தம் திருமணச் சடங்கிற்காக வளர்க்கப்பெற்ற வேள்வித்தீயையே இறையருளால் சிவசோதியாகமாற்றி, அடியார்கள் புடைசூழத் தம்துணைவியாருடன் இறைவனடிசேர்ந்த அற்புத அருள் வரலாறு நினைவுகூரத்தக்க பெருமிதமுடையது. திருஞானசம்பந்தரின் குருபூசைத் திருநாள் வைகாசி மூலத்திருநாளில் தமிழகமெல்லாம் பக்தி சிரத்தையோடு கொண்டாடப்பட்டு வருகிறது.

**ஆண்டவன் வழங்கிய ஆசாரியப் பேறு :-**

சைவசமயத்தின் முதல் ஆசாரியர் திருஞானசம்பந்தர். ஆசாரியர் என்றகுறிப்பு சைவத்தைத் தோற்றுவித்தவர் என்ற பொருளில் ஆளப் பெறவில்லை. என்று உலகு உண்டோ அன்றே சிவபரம் பொருள் உண்டு; என்று சிவபரம்பொருள் உண்டோ அன்றே வேதம் உண்டு; என்று வேதம் உண்டோ அன்றே சைவம் உண்டு. வேதத்தின் உண்மைப் பொருள் சரிவர உணரப்படாது மனித இனம் குழம்பிக்கிடந்த காலங்களில், அக்குழப்பம் நீக்கித் தெளிவுறுத்திய அருளாளர்களே நம்மால் ஆசாரியப் பெருமக்களாகக் கருதிப் போற்றத்தக்கவர்கள்.

'வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத்துறை விளங்க' என்ற சேக்கிழார் சுவாமிகளின் அருள்வாக்கில் 'ஓங்க' 'விளங்க' என்ற குறியீட்டுச்சொற்கள் சைவத்தை வகைப்படுத்தித் தெளிவுபெற வழங்கிய முதலாசாரியர் திருஞானசம்பந்தர் என்பதனை விளக்குகின்றன. திருஞானசம்பந்தருக்கு இவ்வாசாரியப்பேறு சிவபெருமானாலேயே வழங்கப்பெற்றிருந்த அருமைப்பாடு இங்கே நினைக்கத்தக்கது.

**ஆசாரிய அடையாளங்கள் :-**

சிறிய பெருந்தகையாராகத் திகழ்ந்த சைவ முதலாசாரியர் திருஞானசம்பந்தர். உலகியலில் மக்களுக்குத் தலைமை பூணும் மன்னனை மற்றவர்களிலிருந்து வேறுபடுத்தி இனங்காண குடை, கொடி, முரசு, செங்கோல் எனச்சில அடையாளங்களைக் குறிப்பதுபோல, வரலாற்று எல்லை காணப்படாத சைவசமயத்தின் முதலாசாரியராக விளங்கிய திருஞானசம்பந்தருக்கு இறைவனால் வழங்கப்பெற்ற ஆசாரிய அடையாளச் சின்னங்கள் இக்கருத்துக்கு அரண்செய்வன. திருநெல்வாயிலரத்துறையில்,

" ஏறுதற்குச் சிவிகை இடக் குடை
கூறி ஊதக் குலவுபொற் சின்னங்கள்
மாறில் முத்தின் படியினால் மன்னிய
நீறுவந்த நிமலர் அருளுவார் "

என இறைவன் அருளிய ஆசாரிய அடையாளச் சின்னங்களைச் சேக்கிழார் சுவாமிகள் குறித்தருளுகின்றார். திருப்பட்டீச்சரத்தில் முத்துப்பந்தரும் அருளப்பெற்றமை இக்கருத்தை மேலும் வலியூட்டி நிற்கிறது.

**ஆசாரியராக ஏற்றுப் போற்றிய அப்பரடிகள் :**

நால்வர் பெருமக்களுள் திருஞானசம்பந்தரை முதலாசாரியராக முன்வைத்து எண்ணுதல் வழக்கு. திருஞானசம்பந்தர் காலத்தில் வாழ்ந்திருந்த அப்பர் சுவாமிகள் ஆண்டாலும், அனுபவத்தாலும் மிகுந்திருந்தும், திருஞானசம்பந்தரைத் தாமேசென்று தொழவேண்டுமென்ற ஆர்வமுடையவராய்ச் சென்று தொழுது ஆசாரிய நெறி போற்றிய அருமைப்பாடு போற்றி மகிழத்தக்கது.

" பந்தணை மென்விர லாளும் பரமரும் பாய்விடை மீது
வந்துபொன் வண்ணத் தளித்த வரம்பில் ஞானத் தமுதுண்ட
செந்தமிழ் ஞானசம்பந்தர் திறங்கேட் டிறைஞ்சுதற் காக
அந்தண் பூந்தராய் தன்னில் அணைந்தனர் நாவுக்கரையர் "

எனக்குறிக்கும் சேக்கிழார் சுவாமிகளின் வாக்கு இதனை மெய்ப்பிக்கக் காண்கின்றோம். ஆசாரியரை - அவர்வழி நிற்கும் சீடர்கள் சென்று

வணங்கும் மரபினை, திருநாவுக்கரசரின் அருள்வரலாற்ருல் நன்கு உணர முடிகிறது. 'இளையர் இனமுறையர் என்னுது. நின்ற ஒளி யோடு ஒழுகப்படும்' என்ற மரபுமுறை போற்றிய நாவரசர் பெருமிதத் தால், திருஞானசம்பந்தர் சைவ முதலாசாரியர் என்பது தெளிவு படுத்தப்படுகிறது.

**இசை மரபு காத்த எழில் வேந்தர் :-**

சைவத்தின் முதலாசாரியர் என்பதோடுமட்டுமன்றி இயற்கை யோடு இயைந்த தமிழ் இசைக்கும் முதலாசாரியராக ஞானசம்பந்த ரைக் காணுகின்ருேம். 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்' என்ற சுந்தரர் திருப்பாட்டு அரிய சான்று. பேராசிரியர் திரு. பி சாம்பமூர்த்தி ஞானசம்பந்தரை முதல்சாகித்திய கர்த்தா என ஆய்ந்து முடிவுகட்டுகிருர். பெண்மைக்கு உரியபெருமை தரும் சைவ சமயத்தில் காரைக்கால் அம்மையார் அருளிய மூத்த திருப்பதிகம் முதலியன ஞானசம்பந்தர்க்கு முற்பட்டன என்பது உண்மையே என்ருலும், வரையறுத்த பண் அடைவுகளோடு பாமாலைகள் புனைந்து வழங்கிய திருஞானசம்பந்தருக்கே முதல் சாகித்திய கர்த்தா என்ற புகழ் சேர்கிறது. இயற்கையின் அழகி லெல்லாம் இறைவனைக்காணும் திறம்படைத்த ஞானசம்பந்தர்தேவா ரத்துள் இயற்கை வருணனைகள் பேரழகு பூத்துநிற்பதில் வியப்பில்லை.

**கொள்கைவழிநின்ற சிறப்பு :-**

பிறிதோர் சிறப்பினையும் திருஞானசம்பந்தரிடம் காணுகின்ருேம் கி. பி. 7 ஆம் நூற்ருண்டு காலப் பகுதியில் சமயங்கள் பலவும், தம் கொள்கை - கோட்பாடுகளால் ஊன்றி நிற்க இயலாது நொய்மையுற்று, அவ்வக்காலத்து விளங்கிய அரசினைப் பக்கபலமாகக் கொண்டு வாழ்ந் திருந்த அவலத்தை வரலாறு காட்டுகின்றது. பல்லவ மகேந்திர வர்மனையும், கூன்பாண்டியனையும் முன்நிறுத்திக்கொண்டு பின்னே ஒளிந்துநின்ற சமணசமயப் போக்கினை நினைவுகொண்டால் சைவமுதலாசாரியராகிய ஞானசம்பந்தரின் பேராற்றல் நமக்கு விளங்கும். கொள்கைக் கோட்பாடுகளையும் - தத்துவங்களையும் மட்டுமே மக்கள்முன் நிறுத்திச் சமயப்பயிர் வளர்த்த ஞானசம்பந்தர்-நாவுக்கரசர்திறம் போற்றி மகிழத்தக்கது.

சீகாழியில் தொடங்கிய பயணம் ஆச்சாள்புரத்திலே நிறைந்தது. இவ்விருதலங்களுமே தருமையாதீன அருளாட்சியில் திகழ்வன. முதலாசாரியராக - முதல் தமிழ் (இசை) சாகித்திய கர்த்தாவாக - கொள்கைவழி சமயம் வளர்த்த குணக்குன்ருக நின்ற திருஞானசம் பந்தர் திருவடிகளை அவர்களது குருபூசைத் திருநாளில் நினைந்து போற்றி உய்வோமாக.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26-ஆவது குருமகாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

14—4—1979 அன்று

சிதம்பரம் மேலைக்கோபுரம் ஸ்ரீ கற்பகவிநாயகர் சந்நிதியில்

தில்லைத் திருமுறைக்கழகத் தொண்டர்கள்

திருவாரூர் ஸ்ரீ அப்பர்சுவாமிகள் குருபூஜைவிழாவிற்குச் செல்லும்

பாதயாத்திரையினைத் தொடங்கிவைத்து

வழங்கியருளிய

# ஆசியுரை

"என்னை நினைந்து அடிமைகொண்டு என் இடர் கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் - புன்னை
விரசுமகிழ் சோலை வியன் நாரையூர் முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான்."

**இடப் பொருத்தம் :-**

திருவாரூரில் நடைபெற இருக்கும் அப்பர்சுவாமிகள் குருபூஜை விழாவில் கலந்துகொள்ள இங்கே பல மெய்யன்பர்கள், தில்லைத் திருமுறைக் கழகச்சார்பில் இன்று பாதயாத்திரையை மேற்கொள்ள இருக்கின்றார்கள். அவர்கள் இம்மேலைக் கோபுர வாயிலில் கற்பக விநாயகர் சந்நிதியில் இருந்து புறப்படுவது மிகவும் பொருத்தமாகவே இருக்கிறது.

இன்று நம் நாட்டில் பரவலாக நடைபெறும் பாதயாத்திரை, உண்ணாவிரதம், சத்தியாக்கிரகம் ஆகிய அனைத்திற்கும் அப்பர் சுவாமிகளே வழிகாட்டியாகவும் மூலமாகவும் இருப்பவர். சமுதாய நன்மைக்காகத் தன்னை வருத்திக்கொள்ளலாம் எனும் பரந்த நோக்கில்தான் அப்பர்சுவாமிகள் பாதயாத்திரை போன்றவற்றை மேற்கொண்டார்.

இத்தில்லைத் திருக்கோயிலிலுள்ள நான்கு கோபுர வாயிலின் வழியாக நம்சமயகுரவர்கள் நால்வரும் தனித்தனியே வந்து நடராசப் பெருமானை வழிபட்டுள்ளனர். திருஞானசம்பந்தர் தெற்குக் கோபுர வாயில் வழியாகவும், சுந்தரமூர்த்திசுவாமிகள் வடக்குக்கோபுரவாயில் வழியாகவும், திருநாவுக்கரசர் மேற்குக்கோபுர வாயில் வழியாகவும் வந்தார்கள் என்பதற்குப் பெரியபுராணம் சான்று பகர்கிறது. ஆதலின் விடுபட்ட கீழக்கோபுரவாயில் வழியாக மாணிக்கவாசகர் வந்திருத்தல் கூடும் என்று ஊகித்துத் தெரிந்துகொள்ளலாம்.

அப்பர்சுவாமிகள் வந்த கோபுரமாயுள்ள இம்மேலைக் கோபுரத்திலிருந்து அவர்தம் அவதாரத்தலத்தில் நிகழும் குருபூஜைவிழாவிற்குச் செல்லும் மெய்யன்பர்கள் பாதயாத்திரை புறப்படுவது பொருத்தமல்லவா? இன்னொன்றும் சிந்திக்கவேண்டும். திருமுறைக்கும் பிள்ளையாருக்கும் தொடர்பு உண்டு என்பதும், தில்லைக்கும் திருமுறைக்கும் தொடர்பு உண்டு என்பதும் உங்கள் அனைவர்க்கும் தெரிந்தனவே. அங்ஙனம் தொடர்புள்ள நிலையில் இன்று இக்கற்பக விநாயகர் சந்நிதியிலிருந்து இந்தப் பாதயாத்திரை தொடங்குவது திருவருட்பொருத்தமே.

**பாதயாத்திரையும் பயனும் :-**

பாதயாத்திரையில் செல்வோர்க்கும் அவர்களை வரவேற்று உபசரிக்கும் பக்தர்களுக்கும் இப்பாதயாத்திரை மிகவும் பயன் அளிக்கக் கூடியது. பெரிய பெரிய நகரங்களிலேயே வாழ்ந்தும், அந்த நகர மக்களையே கண்டும் அவர்களின் நவநாகரிக வாழ்வினையே அறிந்தும் உள்ளவர்களுக்கு. இப்பாதயாத்திரையால் சிறு சிறு கிராமங்களைக் காணுவதும், அங்கே வாழும் மக்களின் மனநிலை, பக்திமுறை முதலியவற்றை அறிந்து கொள்வதும். அவர்களின் வாழ்வு நெறியினைத் தெரிந்து கொள்வதும் பயனுள்ளதாயிருக்கும் என்பதில் ஐயமில்லை.

மேலும் அங்கங்கே வாழும் மக்களிடையே நம் சைவசமயத்தைப் பரப்புவதற்கு என்ன என்ன முறைகளைக் கையாளலாம் என்றும் அவர்களுடைய வாழ்வியலுக்குத் தேவையான உதவி, கல்வி, மருத்துவவசதி ஆகியவற்றின்வழி சமயத்தைப் பரப்பலாமா? என்பன போன்ற விபரங்களைச் சேகரிப்பதற்கும் இது மிகுந்த பயன் அளிக்கும்.

பாத யாத்திரையாக வருவோர்களை உபசரிக்கும் பக்தர்கள். தங்கள் வாழ்வுசிறக்க இதனைப் பயன்படுத்திக்கொள்வதும், அதனால் பெரும்பயன் அடைந்து இன்புறுவதும் நடைமுறையில் ஒவ்வொரு ஆண்டும் நாம் காண்பது ஆகும். இங்ஙனம் இருபகுதியினரும் ஒருவரை ஒருவர் உபசரிப்பதில் மனவளம் பெறுவதும், நன்கு புரிந்து

கொள்வதும் மட்டும் இன்றி இவற்றிற்கெல்லாம் மேலாக மனப் பக்குவம் உற்றுப் பண்பாடு எய்துகின்றனர். 'பண்பெனப்படுவது பாடறிந் தொழுகல்' என்பது கலித்தொகை. இதனுல்தான் தாயுமான சுவாமிகள்,

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்கின்றுர்.

மாணவர்களுக்குப் பாடம் சொல்லித்தந்து அம்மாணவர்களை வளர்க்கும் ஆசிரியன் தானும் தன் நிலையில் வளர்ந்து சிறப்பெய்துவதை எப்படி இவ்வுலகில் காண்கின்றோமோ அதேபோல, இப்பாதயாத்திரையில் இருபகுதியினரும் தம்தம் நிலையில் வளர்ந்து பிறரையும் வளர்ச்சியுறச்செய்வதைக் காணமுடிகிறது.

இவற்றை நன்கு புரிந்துகொண்டு அப்பர்சுவாமிகள் குருபூசைக்காகச் செல்லும் அன்பர்கள் இவையெல்லாம் நம் வளர்ச்சிக்குத்தான் எனும் உண்மையை உணர்ந்துவிட்டால் அதுவே ஒருபெரும் பயன் ஆகும்.

**அருளாளர்களின் அரியசிந்தனை :-**

இவ்விநாயகர் சந்நிதியில் இருந்து பாதயாத்திரை புறப்படுகின்ற காரணத்தினுல், திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரை வணங்கிப் பாடிய நம்பியாண்டார்நம்பிகள் பாடலை முதற்கண் இங்கு நினைவு படுத்தினேம்.

'எல்லாம் இறைவன் செயல்' என்று சான்றோர்கள் கூறுவதும், 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி' என்று மாணிக்கவாசகர் இயம்புவதும், 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்று தாயுமான அடிகள் சாதிப்பதும், 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' என்று அப்பர்சுவாமிகள் அருளுவதும் எண்ணிப் பார்த்தால் நமக்கு ஓர் உண்மை புலனுவது இயற்கை. அதாவது இறைவன் இவ்வுலகிலுள்ள ஆன்மாவைப்பற்றித் துளியேனும் எண்ணிப்பாராவிட்டால் இதற்கு வேறு கதியே இல்லை என்பதும், இறைவனின் அருள் எண்ணமே ஆன்மாவை ஈடேற்றுகிறது என்பதுமே தெளிவாகும் உண்மையாம்.

இதனையே நம்பியாண்டார்நம்பிகள் தம் அனுபவத்தில் வைத்துக் கூறுகின்றுர்.

" என்னைநினைந்து அடிமைகொண்டு என் இடர் கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் — புன்னை
விரசுமகிழ் சோலை வியன் நாரையூர் முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான் "

என்பது அவர்பாடிய பாடல்.

**நம்பியாண்டார்நம்பிகளின் நாநலன் :-**

முதலில் இறைவன் உயிர்களை நினைக்கின்றானா? அல்லது உயிர்கள் முதலில் இறைவனை நினைக்கின்றனவா? என்ற சாதாரண மனிதனின் கேள்விக்கும் இப்பாடலில் விடையளிக்கின்றார் நம்பியாண்டார் நம்பிகள். இறைவன் முதலில் ஆன்மாவை நினைப்பதால்தான் கேவலநிலையில் ஆணவத்தோடு அத்துவிதமாய்ப் பிரிப்பின்றிக் கிடந்த உயிர் இயங்கத் தலைப்படுகிறது. இயக்கத்தால் நல்வினை தீவினை ஏற்பட்டு அதனால் பிறவி ஏற்படுகிறது. பிறப்பு என்பது ஆணவத்தோடு தனித்திருந்த உயிர் கருவி கரணங்களுடன் கலந்திருப்பதே யாகும். உயிரின் அறிவு, இச்சை, செயல்களை மறைப்பதும், கீழ்த்தரமான வழிகளில் ஈடுபடுத்தி இடர்ப்படுத்துவதுமே ஆணவத்தின் செயல்களாகும். எனவே ஆணவத்தால் விளையும் இடர்களைக் கெடுத்தாலன்றி உயிர் இறைவனை நினையமாட்டாது. ஆணவ இடர், ஓரளவு நீங்கிய உயிர்தான் இறைவனை நினைக்கத் தலைப்படும். அப்படிப்பட்ட உயிர்களிடத்து இறைவன் தன்னை நினையுமாறு தன்னையே தருகின்றான். இதனையே வேறொருவகையில் மணிவாசகரும் "தந்தது உன்றன்னைக் கொண்டது என்றன்னைச் சங்கரா யார்கொலோசதுரர் அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

**அப்பர்சுவாமிகளின் அருள்வாக்கு :-**

இங்ஙனம் விநாயகப் பெருமானின் வணக்கமாக நம்பியாண்டார் நம்பிகள் பாடும் இப்பாடலின் கருத்து இவருக்கு முன்னே வாழ்ந்த அப்பர்சுவாமிகள் பாடலிலும் இருப்பதைக் காணலாம்.

" என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும் முன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடியான் என்று அறிதலும்
தன்னை நானும் பிரான் என்று அறிந்தெனே "

என்பது அப்பாடல். என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான் ஆதலின் தன்னை நானும் முன் ஏதும் அறிந்திலேன் என்று முன் இரண்டு வரிகளில் தான் இறைவனை அறிந்துகொள்ளாமைக்குக் காரணம் கூறினார். பின் இரண்டு வரிகளில் என்னைத் தன்னடியான் என்று

அறிதலும் அதனுல் தன்னை நானும் பிரான் என்று அறிந்தேனே என்று புரிந்துகொண்டமைக்கு விளக்கமும் கூறுகின்ருர். இங்கு அறிதலை நினைதல், உணர்தல் என்ற பொருளில் கொள்ளவேண்டும், ‘உணருமாறு உணரே’, ‘நினையுமா நினையே’ என்ற திருவிசைப்பாச் சொற்ருெடரும், “உணர்த்தில் உணர்வேன், உணர்த்தாயேல் நாயேன் கணத்தும் உணரும்வகை காணேன்” என்ற தருமை முதற் குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கும் நினைந்து இன்புறத் தக்கன.

என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான் என்பதற்குப் பெருமான் ஏதும் அறியாதவன் என்பது பொருளல்ல ; ஆன்மாவிற்கு மூன்று நிலைகள் உண்டு. அவை கேவலநிலை, சகலநிலை, சுத்தநிலை என்பன வாம். அவற்றுள் கேவலநிலை என்பது காரிட்ட ஆணவக் கருவறையில் கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருக்கும் நிலையாகும். சகலநிலை என்பது தத்துவக்கருவி கரணங்களுடன் கூடிப் பிறந்து, இருந்து, இறந்து உழலும் நமது நிலையாகும். சுத்தநிலையாவது பிறப்பு இறப்புக்களினின்றும் விடுபட்டுப் பேரொளிப்பிழம்பாகிய இறையொளியில் இரண்டறக்கலந்து நிற்கும் நிலையாகும். சுருங்கச் சொல்லின் ஆணவத்தோடு அத்துவிதம் கேவலநிலை, மெய்ஞ் ஞானத்தாணுவினேடு அத்துவிதம் சுத்தநிலை. அத்துவிதம் என்பது பொருள் தன்மையால் வேருக உள்ள இருபொருள் கலப்பினுல் வேற்றுமைதோன்ருது ஒன்ருயிருத்தலாம். இதனைத் தாயுமானவர்,

“ஆணவத்தோடு அத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினேடு அத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ ?”

என்று அருளிச்செய்தார்.

என்னை இறைவன் எந்தவகையிலும் நினைந்து உணர்த்தாமையின் தன்னை-இறைவனை நானும்முன் ஏதும் அறிந்திலேன். அவன் உணர்த் தாதமுன் எந்தவகையாலும் இறைவனை நினையவில்லை. அறியவில்லை. உணரவில்லை. என்னை இறைவன் தன் அடியான் என்று அறிந்த துமே அவனை நானும் பிரான் — தலைவன் என்று அறிந்து இன்புற் றேன் என்று இறுமாந்து பாடுகின்ருர் அப்பர் சுவாமிகள். அப்பர் அருளிய அரிய விருந்தைச் சுவைத்துப் பாதயாத்திரை தொடங்குதல் மிகவும் பொருத்தமாகவே உள்ளதல்லவா ? பரமன்புகழ்பாடிப் பாத யாத்திரை தொடங்குவோமாக. பாதயாத்திரை பயன் அளிக்கவும், பங்குகொள்வோர் பலன்பெற்றுச் சிறக்கவும் செந்தமிழ்ச்சொக்கன் திருவருளைச் சிந்திக்கிருேம்.

பரமன் புகழ் பரவுக ! பாதயாத்திரை விரவுக !!

# தருமையில் தெய்வத் தமிழ் முழக்கம்

**பேராசிரியர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.**

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்தில் எங்குபார்த்தாலும் விழாக்கோலம். நான்குவீதிகளில்வாழும் நல்லோர் மனத்திலே குதூகலம். ஒருபக்கம் விழாப்பந்தல் அமைப்பு; ஒருபக்கம் அதிர்வெடி முழக்கம் : ஒருபக்கம் வேதபாராயண ஒலி ; ஒருபக்கம் திருமுறை வாணர்களின் திருமுறை இசை ; ஒருபக்கம் விழாவிற்கு வருவோரும் வரவேற்போரும் சந்தித்துப் பரிமாறிக்கொள்ளும் அன்பு உரைகள் ; இவைகளுக்கெல்லாம் என்ன காரணம் என அறியத் துடிக்கிறீர்கள் அல்லவா ?

ஆம்! 8—5—79 உ செவ்வாய்க்கிழமையன்றுதான் தருமை ஆதீனத்தைத்தோற்றுவித்தருளிய ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜை விழாவும் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் பெருவிழாவும் தொடங்கும் நன்னாள். இருபத்தேழு திருக்கோயில்களிலும் இன்றைய வருவாய் குறைந்த நிலையிலும் எந்த ஒரு விழாவையும் குறைவின்றி நடத்தி வரும் தருமையாதீனம் இருபத்தாருவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சிவராஜதானியாகத் திகழும் தருமபுரத்தில் எடுக்கும் திருவிழா என்றால் சாதாரணமாகவா நடத்துவார்கள் !

காலை 10 மணி அளவில் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருமுன்னிலையில் கொடி ஏற்றம் அன்பர்கள்கண்டுவழிபடச் சிறப்பாக நடந்தேறியது. பின்னர் சமயப் பயிற்சி வகுப்புத் தொடக்க விழா ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாசியுடன் தொடங்கியது. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தம் அருளுரையில் " நாம் கண்ணாடியினைத் தினந்தோறும் போடும்பொழுது எங்ஙனம் துடைத்துவிட்டுப் போட்டுக்கொள்கிறோமோ அதேபோல் தாமேவந்து நாளும் நாளும் உயிரைப் பற்றும் மல அழுக்கினை வழிபாட்டின்மூலம் நீக்கி ஒவ்வொருநாளும் நம்மை நாம் திருத்திவாழக் கற்றுக்கொள்ளவேண்டும் ; அதற்கு இது போன்ற சமயப்பயிற்சிவகுப்பினைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும்' என்று அருளி ஆசி வழங்கினார்கள்.

அடுத்து வகுப்பினைத் தொடங்கிவைத்து உரையாற்றிய திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் சுருக்கமாகச் சில கருத்துக்களைக் கூறினார்கள். இவ்வுலகில் 116 சமயங்கள் உள்ளன அவற்றிலும் ஒன்பதுதான் பெரியது. அவ்வொன்பதும் நம் ஆசியா கண்டத்திலேயே தோன்றியது. அதனால்தான் நம் கண்டத்தை " ஞானம்

பிறந்த கண்டம்'' என்று கூறுகிருர்கள் என்று விளக்கினுர்கள். நம் நாட்டில் இருக்கும் வெற்றுப் பேச்சாளர்களைத் தட்டிக்கேட்பதுபோல ஒரு கருத்தைக் கூறினுர், உண்மையில் என் மனத்தில் இன்னும் அது ஒலித்துக்கொண்டே இருக்கிறது. "பேச்சாளர்களே! உங்கள் சொல்லைவிட உங்கள் வாழ்வைப்பார்த்துத் திருந்துவதுதான் – இந்த நாட்டுக்குத் தேவை; நீங்கள் மலைபோலப் பேசுவதைவிட, கடுகு அளவு செய்துகாட்டுங்கள்; அது இந்த நாட்டுக்குப் பயன்தரும். ஏனெனில் கோடை இடி குளத்தை நிரப்பாது; பயன்தரும் பருவ மழையே குளத்தை நிரப்பும்'' என்ருர். இன்று நாடு போகும் போக்கிற்கு இந்தச் சிந்தனை மிகத் தேவை என்றே எண்ணுகிறேன் என்ருர்.

அடுத்து, சமயப்பயிற்சி வகுப்பு நடத்திய மகாவித்துவான் திரு. சி, அருணைவடிவேல் முதலியார் அவர்கள் "உண்மை விளக்கம்'' என்னும் நூல் முப்பத்தாறு தத்துவங்களின் தன்மைகளையும், ஆணவத்தின் தன்மை, இருவினைகளின் இயல்பு, இவற்றின் வேருகாத உயிரின் தன்மை, இறைவன் தன்மை, நடன இயல்பு, ஐந்தெழுத்தின் உண்மை இவைகளையும் விளக்கிக் கூறுகிறது என்று கூறிச் சிலவற்றை விளக்கினுர்கள்.

அன்றிலிருந்து ஒன்பதுநாட்களிலும் காலை 10-30 மணி முதல் 12-30 மணி வரையிலும், மதியம் 2-30 மணி முதல் 4-30 மணி வரையிலும் சமயப் பயிற்சி வகுப்பு நடைபெற்றது. வேதம், ஆகமம், இதிகாசங்கள், பதினெண்புராணங்கள், உபநிடதங்கள், பத்ததிகள், சிவபூஜா விதிகள், திருமுறைகள், சாத்திரங்கள் காப்பியங்கள், நீதி நூல்கள் போன்ற பல அரிய பெரிய செய்திகளைப்பற்றித் தக்க பல அறிஞர்கள் வகுப்பு நடத்தினுர்கள். அக்கினிகோத்திரம் பிர்மஸ்ரீ இராமானுஜ தாதாசாரியார், சிவஸ்ரீ S. சுவாமிநாத சிவாசாரியார், ஸ்ரீ டி. கே. முத்துசாமி சாஸ்திரிகள், ஆடூர் காசி சிவஸ்ரீ வைத்தியநாத சிவாசாரியார், திரு. பி. இராமதாச ஐயர், திரு. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், திரு. க வச்சிரவேல் முதலியார் முதலான அவ்வத்துறையில் துறை போகக் கற்ற பேரறிஞர்கள் பலரும் பயிற்சியாளர்களுக்கு விளங்கும் வண்ணம் எளிமையாகச் சமயப் பயிற்சி வகுப்பை நடத்தினுர்கள். நாற்பது பயிற்சியாளர்கள் இவ்வாண்டு வகுப்பில் சேர்ந்து கேட்டுப் பயன்பெற்ருர்கள்.

அன்று மாலை 7 மணி அளவில் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு தொடங்கியது. நம்மாநிலக் கல்வி அமைச்சர் மாண்புமிகு திரு. செ. அரங்கநாயகம் அவர்கள் மாநாட்டைத் தொடங்கிவைத்துச்

சிறப்புரையாற்றினுர்கள். நான் இத்தருமையில் 1954 இல் நடைபெற்ற சமயப் பயிற்சி வகுப்பில் கலந்துகொண்டு பயின்றுள்ளேன் என்பதை நினைவுபடுத்திக்கொள்வதில் பெருமை கொள்கின்றேன் என்றும், சைவ சித்தாந்தத்தை ஒருவர் நன்கு தெளியக் கற்றுவிட்டால் அவரைவிட இவ்வுலகில் சிறந்த அறிஞர் இருக்கமுடியாது என்றும் கூறினுர்கள். தாம் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு தருமையில் படித்தமையை நினைவுவைத்துக்கொண்டிருப்பதோடு அமைச்சராக உயர்ந்தபோதும் மறவாது சொல்லிப் பெருமைப்படுகிருர் என்ருல் கல்வி அமைச்சர் அவர்களின் எளிமையும் பண்பாட்டு உள்ளமும் எண்ணி எண்ணிப் பாராட்டத்தகுந்ததுதானே! பிறகு பேசிய திரு. ப சுந்தரேசனுர் அவர்கள் 'தாரம்' என்னும் இசையின் நுட்ப விளக்கங்களைக் கூறினுர்கள். தேவாரத்தில்வரும் "பாடுகின்ற பண்டாரமே பத்தரன்ன பண்டாரமே" என்னும் வரிகளில் காணும் 'தாரம்' எனும் சொல்நயத்தினை மனங்கொள்ளும்வகையில் விளக்கினுர்கள். நம் திருமுறைகளில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனும் ஏழு சுரங்களையும் விளக்கியுள்ள பாங்கினை நன்கு எடுத்துக் காட்டினுர்கள்.

அடுத்து, டாக்டர் திரு. சொ. சிங்காரவேலன் அவர்கள் 'நால்வர் வாக்கில் சைவசித்தாந்தம்' என்னும் பொருளைப்பற்றிச் சுருக்கமாக "விளையாததொர் பரிசில்வரு பசு பாசம்" என்ற திருமுறைப்பாடல் ஒன்றில் முப்பொருள் அமைந்திருக்கும் பாங்கினை எடுத்துக் கூறினுர்.

இரண்டாம் நாள் - சேக்கிழார் திருநாள் பட்டிமண்டபமாக மலர்ந்தது சேக்கிழார் வடித்த பெரியபுராணம் மரபுவழிக் காப்பியமா? திருப்புமுனைக் காப்பியமா? என்பது தலைப்பு. அறுவர் மிக அருமையாக வாதம் செய்தனர். நடுவர், திரு. ஔவை. நடராசன் அவர்கள் மிகச் சுருக்கமாக "வழிபாட்டுநிலையில் முன் இருந்த முறையினைத் திருப்பி அவரவரின் நிலையிலேயேநின்று, தொண்டு செய்து இறையடி அடையலாம் என்று சேக்கிழார் மரபுவழியினின்று மாற்றி ஒரு திருப்புமுனையில் காவியம் செய்துள்ளமையால் திருப்புமுனைக் காப்பியமே" எனத் தீர்ப்புக் கூறினுர்.

இங்கு ஒரு சிந்தனை தோன்றுகிறது. நம் அநபாயமன்னன், சிந்தாமணி எனும் இன்பநூலையே படிக்கக்கண்டு, "இது அழகல்ல அரசனே! நம்மரபு வழுவாநிலையில் நாம் நிற்க இதோ இருக்கிறது அடியார்கள் வரலாறு" என்று எடுத்துக்கூறி, அவன்வேண்டுகோளுக்கிணங்க எழுந்ததே பெரியபுராணம் ஆதலாலும் இன்னும் அடியார்களின் வரலாறு கூறும் பல்வேறு பண்பாட்டு நிலைக்களன்களில் நின்று பார்த்தாலும் அது மரபுவழிக்காப்பியமாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா! நீங்களே யோசித்து முடிவுக்கு வாருங்கள்.]

மூன்றும் நாள் - பரஞ்சோதி முனிவர் திருநாள். வழக்காடு மன்றமாகத் திகழ்ந்தது நடுவராக திரு. அ. கலியபெருமாள் அவர்கள் பொறுப்பேற்றார். "அரசின் நிதியால் ஆலயம் அமைத்த மாணிக்க வாசகர் செயல் சமூக நோக்கில் குற்றமே" என்பது வழக்கு. வழக்காடிய இரண்டு பெண்பாலாரும் நன்றாக வாதிட்டார்கள். பெண்களுக்குச் சண்டைபோடக் கற்றுக்கொடுக்கவா வேண்டும்? குரல் வளத்திற்கும் ஒன்றும் குறைவில்லை. நடுவர் பொறுப்பேற்றிருந்த திரு அ. கலியபெருமாள் அவர்கள் இடை இடையே தன்னை நினைவு படுத்திக்கொண்டார் - அவைக்கு - அந்த அளவுக்கு வாதத்தில் கார சாரம் இருந்தது. 'மணிவாசகர், திருக்கோயில் கட்டியமையாலும், இறைவன் அருளால் மன்னனே பின்னர் உணர்ந்துகொண்டு வருந்துகிறான் ஆதலாலும் மணிவாசகர் செயல் சமூகநோக்கிலும் குற்றமில்லை" என்று தீர்ப்புக் கூறினார்.

நான்காம் நாள் - சங்கப்புலவர் திருநாள் கவியரங்கமாக முகிழ்த்தது. 'சங்கப் புலவர்களுடன் ஒரு சந்திப்பு' எனும் அருமையான தலைப்பில் கவிதை பாடினர். தலைவர் செஞ்சொற்கொண்டல் திரு. சொ. சிங்காரவேலனார் உட்பட அறுவர் கவிதைகளும் கருத்துமழையாகவே இருந்தன. கவிதை மழை பொழிந்த அன்று கருமுகிலும் விடவில்லை. அதுவும் தன் கைவரிசையைக் கால்வரிசையுடன் காட்டி மகிழ்ந்தது.

ஐந்தாம் திருநாள் - கச்சியப்பர் திருநாள் கருத்தரங்கமாக நடைபெற்றது தமிழக சட்டமேலவைத் தலைவர் மாண்புமிகு ம. பொ. சிவஞானம் அவர்கள் சிறப்புரை யாற்றுகையில் "கந்தபுராணம் எனும் நூல் மிகவும் அருமைப்பாடு உடையது. புலவர்கள்கூட அதிகம் எடுத்தாளும் பழக்கம் இல்லாதது; என்றாலும் அந்நூலையும் இந்நாட்டில் பரப்பிய பெருமை மதிப்பிற்குரிய வாரியார் சுவாமிகள் அவர்களையே சேரும்" என்று கூறினார். இதைக்கேட்டு நான் நெகிழ்ந்து போனேன். அறிஞர் ஒருவர் இன்னொரு அறிஞரை மனந்திறந்து பாராட்டும் பண்பு நம்தமிழ்மண்ணில் இன்னும் அருகிவிடவில்லை என்பதை உணர்ந்தேன். அன்றைய நாளில் மேலும் மாண்புமிகு உயர்நீதிமன்ற நீதிபதி. திரு. செங்கோட்டுவேலன் அவர்கள் நமது தத்துவங்களை வெளிநாட்டவர்கள் வரவேற்கும் பாங்கினை விளக்கித் தொடக்கவுரையாற்ற, மற்றும் அக்கினிகோத்திரம் பிரம்மஸ்ரீ இராமானுஜ தாதாசாரியார், திருக்குறளார் திரு. வீ. முனுசாமி, திரு. ந. ரா. முருகவேள் முதலியார் கந்தபுராணத்தில் வேறுவேறு கோணங்களில் ஆய்ந்து உரையாற்றினார்கள்.

(தொடரும்)




தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

திரு. கு. சுந்தரமூர்த்தி எம். ஏ.,

( மலர் 38, இதழ் 6, பக்கம் 250 இன் தொடர்ச்சி )

மெய்கண்ட நூல்கள் பதினுன்கனுள் சிவஞான போதமே, உயிர் இறை தளை ஆகிய முப்பொருள்களையும் தொகுத்தும் வகுத்தும் விளக்க எழுந்த முதல்நூலாகும். இதனை முழுமையாக அடியொட்டி எழுந்த வழிநூலே சிவஞான சித்தியாராகும் சார்பு நூலாக விளங்குவது சிவப்பிரகாசமாகும். முப்பொருள்களின் இயல்பை ஆராயுங்கால் இம் மூன்று நூல்களையும் ஒருங்குவைத்துக் காண்டல் பொருத்தமாகும். தெளிவாக உணர்தற்கும் வாயிலாகும்.

**சிவஞான போதம் :-**

இது பன்னிரண்டு நூற்பாக்களை உடையது. இவற்றுள் மூன்ரு வது நூற்பாவும் நான்காவது நூற்பாவின் தொடக்கமும் உயிர் உள் பொருள் என்றும், அதுபற்றிப் பிறர் கூறுவனவெல்லாம் எவ்வாறு பொருத்தமற்றன என்றும் கூறுவதாகும். நான்காம் சூத்திரத்தின் பிற் பகுதி உயிரின் இலக்கணத்தை உணர்த்துவதாகும். ஏழாவது நூற்பா இறைவனை உணர்தற்குரிய உரிமை உயிர்க்கே உளதெனக் கூறுவதாகும். ஒன்பதாவது நூற்பா திருவருள் தோய்வில் நிற்கும் உயிர் மீண்டும் உலகியல் உணர்விற்கு வாராவண்ணம் செய்பத் தக்கது யாது என்பதை உணர்த்துவதாகும். பத்தாவது நூற்பா அவ்வாறு செய்தபின் அதற்கு வரும் பயனைக் கூறுவதாகும். பன்னி ரண்டாவது நூற்பா பெற்றபயனை நெகிழவிடாது அதன்கண்ணேயே திளைக்குமாற்றிற்கு வழி கூறுவதாகும். எனவே சிவஞான போதத் தில் உயிரியல்பை அறிதற்கு இவ் ஆறு நூற்பாக்களும் துணையாக உள்ளன.

**உயிர் - உள்பொருளே :-**

உயிர் உள்பொருளா? இல் பொருளா? என்பதே முதற்கண் எடுத்துக்கொள்ளப்படும் ஆய்வாகும். நம் உடலைப் பொதுமையாகக்

காணுமிடத்தோ, அன்றி உடல் பொறி மனம் எனப் பிரித்துக் காணுமிடத்தோ உயிர் ஒன்று இருப்பதாகத் தோன்றுமாறில்லை; ஆதலால் உயிர் என்பது ஒன்றில்லை என்பர் ஒருசாரார். இவரைச் 'சூனிய ஆன்ம வாதிகள்' என்பர். அவ்வாறு கூறுவாரை நோக்கி ஆசிரியர் கூறுகின்றார். உயிர் என்பது ஒன்றில்லை என்றுகூறுகின்ற நீ உடலைப் பார்த்து இது உயிரன்று, பொறிகளைப் பார்த்து இவை உயிரன்று, மனத்தைப் பார்த்து இது உயிரன்று என ஒவ்வொன்றாகக் கண்டு இது அன்று இது அன்று எனக் கழித்துக் கூறுகின்றாய்; அவ்வாறு அன்று அன்று எனக்கூறுவது எதுவோ அதுவே உயிர் என ஆசிரியர் மறுக்கின்றார். 'இலது என்றலின் உளது' என்ற தொடர் இதனை விளக்குவதாகும்.

**உயிர் - உடல் அன்று :-**

காணப்படும் உடலே உயிராகும்; இதுவன்றி உயிர் என்பது வேறில்லை என்பர் ஒருசாரார். இவரைத் 'தேகான்ம வாதிகள்' என்பர். இவ்வாறு கூறுகின்றவர்களும் உடலைக்குறிக்குங்கால் எனது உடல் பெருத்துக்கொண்டுவருகிறது அல்லது இளைத்துக்கொண்டு வருகிறது எனக் கூறுகின்றனர். தன்னோடு ஒற்றுமையுடைய ஒரு பொருளை யான் என்ற சொல்லாலும், தன்னின் வேறாய பொருளை எனது என்ற சொல்லாலும் உலகில் குறித்துவரக் காண்கின்றோம். எனது வீடு, எனது நாடு, எனது நூல் என வழங்குதல் காண்க. இவ்வகையில் எனது உடல் என்னில், எனது என்று கூறுவது வேறு அதன் உடல் வேறு என்பது விளங்குகின்றது. எனவே எனது உடல் என்பதில் எனது என்பதால் குறிக்கப்படும் பொருளினும் உடல் வேறானது என்பது புலனாகின்றது. எனவே உடலின் வேறாக உயிர் ஒன்று உளது என்பது பெறுதும் என்பர் ஆசிரியர். 'எனது உடல் என்றலின்' என்னும் தொடர் இதனை விளக்குகின்றது.

**உயிர் - ஐம்பொறிகள் அன்று :-**

இனி, மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளே பார்ப்பது நடப்பது கேட்பது முதலிய செயல்களைச் செய்தலின் அவையே உயிர் என்பர் ஒருசாரார். இவர்களை 'இந்திரிய ஆன்ம வாதிகள்' என்பர். கண் முதலிய பொருள்கள் காண்டல் முதலிய செயல்களைச் செய்யினும் ஒருபொறிக்கு உளதாய ஆற்றல் பிறிதொரு பொறிக்கு இல்லை. கண் காணுமே அன்றிக் கேளாது. காது கேட்குமே அன்றிக் காணாது. இவ்வாறே ஏனைய பொறிகளும் ஆம். எனவே இவ்வைம் பொறிகளையும் துணையாகக் கொண்டு அவற்றின் பயனை அறியும் ஒரு பொருள் உண்டு; அதுவே உயிராம் என்பர் ஆசிரியர். இதனை 'ஐம்புலன் அறிதலின்' என்னும் தொடர் விளக்குகின்றது.

**உயிர் - நுண்ணுடம்பு அன்று :-**

இவ்வைம் பொறிகளும் ஒடுங்கியிருக்கும் உறக்கத்தின்கண் கனவு நிகழுங்கால் அதனை அறிந்து இன்புறும் ஒரு பொருள் உளது; அதுவே நுண்ணுடம்பு ஆகும். எனவே அதுவே உயிராம் என்பர் ஒருசாரார். இவரைச் 'சூக்குமான்ம வாதிகள்' என்பர். இந்நுண் ணுடம்பு கனவிலும் செயற்படுகின்றது. நனவிலும் செயற்படுகின்றது. இதுவே உயிராயின் கனவின்கண் கண்ட ஒரு செயலை நனவின்கண் மயங்கி அறிதல் வேண்டுவதில்லை. ஆனால் நடைமுறையில் கனவில் கண்டதை நனவில் மாறியும் மயங்கியும் முடிவுபோதல் இன்றியும் கூறக் காண்கின்றோம். ஆதலின் நுண்ணுடம்பே உயிர் என்றல் சாலாது என்பர் ஆசிரியர்; இதனை ஒடுக்கம் அறிதலின்' என்னும் தொடர் விளக்குகின்றது.

**உயிர் - உயிர்க்காற்று (பிராணவாயு) அன்று :-**

நனவின்கண் அன்றி கனவு நிலையிலும் உறக்க நிலையிலும் பேருறக்க நிலையிலுங்கூட உயிர்க்காற்று (பிராணவாயு) இயங்கி வருகின்றது; ஆதலின் அதுவே உயிர் என்பர் ஒரு சாரார். இவரைப் 'பிராணான்மவாதிகள்' என்பர். இவ்வுயிர்க்காற்று உறக்கம் பேரு றக்கம் ஆகிய காலத்தும் இருத்தல் உண்மையே. ஆனால் அதுவே உயிராயின் நனவின்கண் பெறும் இன்ப துன்ப நுகர்வுகளையும் உறக்கம் பேருறக்கம் ஆகிய காலத்தும் பெறுதல்வேண்டும். அவ்வாறு இன்மையின் அதுவே உயிரென்றல் சாலாது என்பர் ஆசிரியர். இதனைக் 'கண்படில் உண்டிவினை இன்மையின்' என்னும் தொடர் விளக்குகின்றது.

**உயிர் - இறை (பிரமம்) அன்று :-**

இனி எல்லாவற்றையும் ஒக்க உணரும் பிரமப்பொருளே உயிர் என்பர் ஒரு சாரார். இவர்களை 'விஞ்ஞான ஆன்மவாதிகள்' என்பர். பிரமப்பொருள் என்பது ஒருவர் அறிவதன்றித் தானே ஒக்க உணரும் தன்மையது. ஆனால் உயிரோ ஒருவர் அறிவிக்க அறியும் தன்மை யது. ஆதலின் பிரமமே உயிர் என்றல் சாலாது என்பர் ஆசிரியர். இதனை 'உணர்த்த உணர்தலின்' என்ற தொடர் விளக்குகின்றது.

**உயிர் - பல் பொருள் கூட்டு அன்று :-**

இதுகாறும் கூறிய உடல், பொறி, நுண்ணுடம்பு, உயிர்க்காற்று ஆகிய ஒவ்வொன்றுமே உயிர் என்றல் சாலாது என்பது உண்மையே. எனினும் இவை அனைத்தும் ஒருங்குகூடியவழியன்றிச் செயற்பாடு நிகழ்வதில்லை. ஆதலின் இவ்வனைத்தின் கூட்டமே உயிர் என்பர் ஒருசாரார். இவரைச் 'சமூக ஆன்மவாதிகள்' என்பர். இவற்றின் கூட்டத்தால் செயற்பாடு நிகழினும் இவை ஒவ்வொன்றிற்கும் தனித்

தனியே இது உடல், இது பொறி, இது உயிர்க்காற்று என வெவ்வேறு பெயர் இருத்தலானும் இவை அனைத்தும் கூடிய கூட்டத்திற்கு உடம்பென்பது பெயரே அன்றி உயிர் எனப் பெயர் இல்லாமையானும் இவ்வனைத்தும் உயிர்க்குக் கருவியாகுமே அன்றி உயிராகாது என்பர் ஆசிரியர். இதனை 'மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது' என்னும் தொடர் விளக்குகின்றது.

**உயிர் - அகக்கருவிகள் (அந்நக்கரணங்கள்) அன்று :-**

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அகக்கருவிகள் நான்குமே உயிர் என்பர் ஒருசாரார். இவரை 'அந்தக்கரணான்ம வாதிகள்' என்பர். கருவிகள் நான்கனுள் மனம், கண் முதலிய கருவிகளின் வாயிலாக ஒருபொருளைப் பற்றும். சித்தம் அதனை இன்னதெனச் சிந்திக்கும். அகங்காரம் அதன் பயனாக இதுதான் எனத் துணியும். புத்தி அவ்வாறு துணிந்து கொண்ட ஒன்றனை ஏற்கும். இக்கருவிகள் நான்கும் தத்தமக்குரிய செயலைச் செய்யுமே அன்றி ஒன்றற்குரிய செயலைப் பிறிதொன்று செய்யாது. அன்றியும் ஒன்றைப் பற்றுதற்கும், சிந்தித்தற்கும், தெளிதற்கும், ஏற்றுக் கோடற்கும் காரணமாகுமேயன்றி நான் பற்றினேன், நான் சிந்தித்தேன் என அவை ஒவ்வொன்றும் தன்னைத்தான் அறியமாட்டாதாகும். ஆதலின் இவ்வகக்கருவிகளைக் கொண்டு அறிவது எதுவோ அதுவே உயிர் என்பர் ஆசிரியர். இதனை, 'அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று' என்ற தொடர் விளக்குகின்றது. (தொடரும்)

---



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
திருநெறிய தெய்வத்தமிழ் மாநாட்டில் சிறப்புரையாற்றிய
சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி
மாண்புமிகு. திரு. செங்கோட்டுவேலன் அவர்களுக்கு
பொன்னாடை போர்த்தி ஆசியருளல்
12 — 5 — 79



ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் பெருவிழாவில் :
ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
ஸ்ரீ ஞானாம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர்
திருக்கல்யாணகோலத்தைத் தரிசனம் செய்தருளல்.
14 — 5 — 79



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை
திருநெறிய தெய்வத்தமிழ் மாநாட்டில் சிறப்புரையாற்றிய
சட்டமன்றத்தலைவர்
மாண்புமிகு ம பொ. சிவஞானம் அவர்கள்
குடும்பத்தினருடன் தரிசித்து ஆசிபெறுதல்.
12 — 5 — 79



தருமையாதீனக் குருமுதல்வர் குருபூஜை விழாவில்
ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
பட்டணப்பிரவேசமாக, சிவிகையில் திருவீதியுலாவருதல்.
18 — 5 — 79

# திருநல்லம் (கோனேரிராஜபுரம்)
# திருக்கோழம்பத் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர்** எம். ஏ.

## 1. திருநல்லம் (கோனேரிராஜபுரம்)

தஞ்சைமாவட்டம் மாயூரம் வட்டத்தில் ஆடுதுறை புகைவண்டி நிலையத்தின் தென்கிழக்கே 10 கி. மீட்டர்தூரத்தில் உள்ளது இத் தலம். ஆடுதுறையிலிருந்து வடமட்டம் செல்லும் பேருந்துகளிலும், கும்பகோணமிருந்து வடமட்டம் செல்லும் நகரப் பேருந்துகளிலும் செல்லலாம். கும்பகோணம் காரைக்கால் பேருந்துகளில் வருவோர் புதூரில் இறங்கி 4 கி. மீ. தென்கிழக்கே செல்ல வேண்டும். சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் இது 34 ஆவது தலம்.

திருநல்லம் என்பது இத்தலத்தின் பழம்பெயர். கோனேரிராஜ புரம் என்று இத்தலம் இன்று வழங்கப்பெறுகிறது. ஞானசம்பந்தர், அப்பர்பாடியருளிய இரண்டுதிருப்பதிகங்கள் இத்தலத்திற்குஉள்ளன. சோழப்பேரரசியாக விளங்கிய செம்பியன் மாதேவியாரின் திருப்பணி களைப் பெற்றது இத்தலக்கோயில். இங்குள்ள நடராசர் விக்கிரகம் புகழ்பெற்றதாகும்.

**கோயிலமைப்பு :-** 'நலமார் மறையோர்வாழ் நல்லம் நகர்' என்ற ஞானசம்பந்தர் திருவாக்கின்படி இவ்வூரில் அந்தணர்கள் பலரும் வளமோடு வாழ்கின்றனர். ஊரின் நடுவே மேற்கு நோக்கி அமைந் துள்ளது கோயில். கோயிலுக்கு எதிரே சக்திதீர்த்தம் விளங்குகிறது. குளத்தின்கரையில் தல மரமாகிய அரசு திகழ்கிறது. கட்டைக் கோபுரத்தைக்கடந்து உள்ளேசென்றால் வெளிப்பிராகாரம். வாயிலின் இருபுறங்களிலும் கிழக்கு நோக்கி விநாயகர், முருகன் கோயில்கள் உள்ளன. வடக்குப்பிராகாரத்தில் அம்பாள் கோயில் ஒரு திருச்சுற் றுடன் கிழக்கு நோக்கி விளங்குகிறது. அதையடுத்து வைத்தீஸ் வரர்கோயில் மேற்கு நோக்கிய நிலையில் காணப்படுகிறது. புரூரவ மன்னனுக்குக்குட்டநோய் தீர்த்தருளியவர் இம்மூர்த்தி. எதிரே நந்தி இல்லை. நந்தி இல்லாத இவ்வாலயத்தில் ஜபம்செய்தால் ஒன்றுக்குப் பதின்மடங்கு ஜபபலன் பெறுவர் என்று கூறப்படுகிறது.

வெளிப்பிராகாரத்தை வலம்வந்து ஆலயத்தின் உள்ளே நுழையும் நுழைவாயிலில் பெரிய மண்டபம் காணப்படுகிறது. திருவிழாக்காலங்களில் சுவாமி எழுந்தருளிக் காட்சிகொடுக்கும் இம்மண்டபம் கருங்கல்லால் - நல்ல வேலைப்பாடுகளுடனும் சித்திரங்களுடனும் திகழ்கிறது. விநாயகர், கொடிமரம், நந்தி, பலிபீடங்கள் இங்குள்ளன.

அடுத்துள்ள வாயில் மூன்று நிலைகளுடைய இராஜகோபுரத்தோடு திகழ்கிறது. இரண்டாம் வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் மகாமண்டபம், கன்னிமூலையில் விநாயகரின் பல்வேறு வடிவங்கள் உள்ளன. மகாமண்டபம் நடராஜ சபையாகத் திகழ்கிறது. இம் மண்டபத்தில்தான் இத்தலத்தின் புகழ்பெற்றமூர்த்தியாகிய நடராஜர் விளங்குகிறார். அருகில் பஞ்சமூர்த்திகளின் திருவுருவங்களும் பிற திருவுருவங்களும் எழுந்தருளுவிக்கப் பெற்றுள்ளன. நடராசருக்கு அருகில் கிழக்குநோக்கி முருகன். கஜலக்ஷ்மி திருவுருவங்கள் உள்ளன. மண்டபத்தைக்கடந்து முதல்திருச்சுற்றை வலம்வரலாம். இப்பிராகாரத்தில் பயிரவர், சூரியன் மற்றும் பல சிவலிங்கமூர்த்திகள் உள்ளனர். சண்டேசுவரர்கோயில் உள்ளது.

சுவாமி விமானம் சோழர் கலைப்பாணிகளோடு அழகிய பெரிய விமானமாகத் திகழ்கிறது. கர்ப்பக்கிருகக் கோஷ்டங்களில், வடக்கே இடபாரூடர், துர்க்கை, பிக்ஷாடனர், பிர்மா திருவுருவங்கள் உள்ளன. கிழக்கே இலிங்கோற்பவர் உருவம் உள்ளது. இருபுறங்களிலும் திருமாலும் பிரமனும் தனித்தனி உருவங்களில் விளங்குகின்றனர். தெற்கே தக்ஷிணாமூர்த்தி, நடராசர், விநாயகர், அகத்தியர்திருவுருவங்கள் உள்ளன. செம்பியன்மாதேவி, கண்டராதித்தர் சிவலிங்கத்தை வழிபடும் புடைப்புச் சிற்பங்கள் கோயிலில் உள்ளன. வலம்வந்து உள்வாயிலைக் கடந்து அர்த்த மண்டபத்தை அடைந்து சுவாமி சந்நிதியை அடைகின்றோம். இருபுறங்களிலும் சோழர்காலத் துவார பாலகர் திருவுருவங்கள் உள்ளன. விநாயகர் எழுந்தருளியுள்ளார்.

கர்ப்பக்கிருகத்தில் விளங்கும் உமாமகேசுவரர் மிக்க அழகுடைய திருவுருவத்தோடு காட்சிதருகிறார். சிவலிங்கமூர்த்தியின் பாணம் பெரியது. சுவாமி சந்நிதியில் நின்று,

"குளிரும் மதிசூடிக் கொன்றைச் சடைதாழ
மிளிரும் அரவோடு வெண்ணூல் திகழ்மார்பில்
தளிரும் திருமேனித் தையல் பாகமாய்
நளிரும் வயல்சூழ்ந்த நல்ல நகரானே"

என்ற தேவாரத்தை ஓதி வழிபட்டு மகிழலாம்.

**தலச்சிறப்பு :-** இத்தலத்திற்கு வடமொழியில் புராணம் ஒன்று உள்ளது. இந்நூலில், திருமாலுடைய ஆணைப்படி இக்கோயில் பூமிதேவியால் கட்டப்பட்டதால் இத்தலம் பூமீசுவரம் என்று பெயர் வழங்கப்பட்ட செய்தி இடம்பெற்றுள்ளது. புரூரவஸ் என்ற மன்னன் இங்குள்ள பெருமானை வழிபட்டுத் தனக்குவந்த குட்டநோய் தீர்ந்து தன் நன்றியறிதலுக்கு அறிகுறியாக இப்பெருமானுடைய விமானத்தைப் பொன்வேய்ந்து அழகுறுத்தினன்; இக்கோயிலில் வைகாசி விசாகந்தோறும் திருவிழா நடத்த ஏற்பாடுகள்செய்தான் என்ற வரலாறும் தலபுராணத்தில் கூறப்படுகின்றது.

அரசமரத்தைத் தலமரமாகக் கொண்ட சிறந்த தலங்கள் மூன்று. ஒன்று - காசி. இரண்டு - திருவாவடுதுறை. மூன்று - இத்தலம். இத்தலத்திலுள்ள திருக்குளத்தில் நீராடி இறைவனைவழிபட்டு அரசை வலம் வருவோர் மக்கட்பேறு முதலிய எல்லாநலங்களும் பெறுவார்கள்.

திக்குப்பாலகர்கள் பூசைசெய்த தலங்களாகிய நாகம்பாடி - இந்திரன், அன்னியூர் - அக்னி. கருவேலி - இயமன், வயலூர்-நிருதி. சிவனரகரம் - வருணன், அகலங்கண் - வாயு, புதூர் - குபேரன், நல்லாவூர் - ஈசானன் ஆகிய எட்டுத்தலங்களும், பிரம விஷ்ணுக்கள் பூசித்த வைகல் - பிரமன், திருவீழிமிழலை - விஷ்ணு ஆகிய இருதலங்களும் சூழ்ந்து விளங்க இத்தலம்நடுநாயகமாகத் திகழ்கின்றது.

**மூர்த்திகள் :-** இறைவன் திருப்பெயர் - அருள்மிகு உமாமகேசுவரர். பூமிதேவி பூசித்ததால் பூமிநாதர் எனவும் வழங்கப்பெறுவர். நல்லம் உடையார் எனக் கல்வெட்டுக்களில் வழங்கப்பெறுகிறது. அம்பிகை திருப்பெயர் அருள்மிகு மங்களநாயகி. ஸ்ரீ தேகசௌந்தரி எனவும் வழங்கப்பெறுகிறார். தீர்த்தம் - சக்தித்தீர்த்தம். கங்கைக்குச் சமமானது. தலமரம் - அரசு.

**வரலாற்றுச் சிறப்புக்கள் :-** இத்திருக்கோயிலை மதுராந்தக தேவனான உத்தம சோழன் தாயும், கண்டராதித்த சோழன் மனைவியுமான செம்பியன் மாதேவி கருங்கல் திருப்பணியாகக்கட்டினாள் என்பது குறிப்பிடத்தக்க பெருமைக்குரியது.

கண்டராதித்தர்: திருவிசைப்பாவில் தில்லைத் திருப்பதிகம் அருளிய சோழமன்னர். கி. பி. 950 முதல் 957 வரை சோழ நாட்டை அரசு புரிந்தவர். இவர் தம் மனைவியாரே செம்பியன்மாதேவி யாவர். கண்டராதித்தனுக்குச் செம்பியன்மாதேவிபால் பிறந்த மைந்தர் மதுராந்தக உத்தம சோழனாவார்.

செம்பியன்மாதேவி சிவஞானியாக விளங்கிய தம் கணவர் இறந்தபின் அவர் நினைவாக இத்தலத்தில் கண்டராதித்தம் என்ற பெயரில் இத்திருக்கோயிலைக் கற்றளியாகப் புதிப்பித்துக் கட்டியுள்ளார். இச்செய்தி தெற்குப் பிராகாரத்திலுள்ள கண்டராதித்தரின் கற்படிமத்தின்கீழ்ப் பொறிக்கப்பெற்ற கல்வெட்டாலறியலாம்.

**கல்வெட்டுக்கள் :-** கோனேரிராசபுரத்துக்கோயிலுக்கு மானியமாகப் பூங்குடியில் 12 வேலி நிலமும் முசிட்டக்குடியில் 4 வேலி நிலமும் இருந்தன என்றும், அவற்றிலிருந்து பஞ்சவாரவாரியமாக அரசுக்குக் கிடைத்த 800 கலம் நெல்லைக் கோயிலுக்கே உத்தம சோழன் அளித்ததையும், மேலும் ஈழநலம் கிராமத்தில் 12 வேலி நிலத்தை மன்னன் இக்கோயிலுக்கு வழங்கியதையும் அக்கல்வெட்டுக்கள் கூறுகின்றன. மேலும் அவ்வப்போது உத்தமசோழன் இக்கோயிலுக்கு வழங்கிய நிபந்தங்கள் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் படுகின்றன.

இறைவனுக்குரிய பலவகை நிவேதனங்கள் சந்தனக்காப்பு தூபதீபம் செம்பியன்மாதேவியின் பிறந்தநாள்விழாவழிபாடு மார்கழித் திருவாதிரை வைகாசி விசாகம் ஆகிய திருவிழாக்களில் அந்தணர்கட்கும் ஏனைய அடியார்கட்கும் உணவிடல், சந்தனம் அரைப்பாருக்கு ஊதியம், திருவிழாக்காலங்களில் வாகனம் தூக்குவோர் பூப் பறிப்போர் மாலைதொடுப்போர் மெழுகுவோர் பாடுவோர் அந்தணர் கணக்கர் தச்சர் கொல்லர் முதலியோர் ஊதியங்கள், கோயிலைப் பழுதுபார்க்கும் செலவு, அபிடேகச் செலவு முதலியவற்றிற்கு வழி வகுத்து நிபந்தங்கள் அளித்துள்ளதைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இக்கல்வெட்டு கோயில்நிலங்கள் குடிமக்கள் பலரது வாழ்க்கை வருவாய்க்கு உதவும் நிலையில் விளங்குவதைத் தெரிவிக்கிறது.

மூலத்தானத்தைச்சுற்றி விளங்கும் திருநடைமாளிகை, முதல் இராசராசன்காலத்து ஆதனூர் அருள்மொழித்தேவனால் கட்டப்பட்டதாகும். கோயிலின் கோபுரம் வேங்கிபுரம் முதலிப் பிள்ளையின் நன்கொடையால் அமைக்கப்பட்டது. இராசராசனுடைய 12 ஆம் ஆண்டில் கைக்கோளர் இனத்தைச்சார்ந்தவளும் அந்தப்புரத்துப் பணிப்பெண்ணுமான நக்கன் நல்லத்தடிகள், உமாமகேசர் சண்டேசர் செப்புத்திருமேனிகளைச்செய்து வழங்கியுள்ளாள். குந்தவைப்பிராட்டியாரும் இக்கோயிலுக்குப் பல நன்கொடைகள் வழங்கியுள்ளார். இராசராசன், இராசேந்திரன், முதல் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், முதற் குலோத்துங்கன், மூன்றும் குலோத்துங்கன், மூன்றும் இராசராசன் ஆகியோர் காலக் கல்வெட்டுக்களும் இக்

கோயிலில் உள்ளன. இவற்றை நோக்க சுமார் 2½ நூற்றுண்டு அரச பரம்பரையினர், குடிமக்கள் ஆகியோரின் ஆதரவையும் நன்கொடைகளையும் பெற்று இத்திருக்கோயில் பொலிவுற்று விளங்கியதைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

**தேவாரத்திருப்பதிகங்களும் பாடல்களும் :** திருநல்லத்திற்கு ஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகம் முதல் திருமுறையில் 85 வது பதிகமாகவும் அப்பர் அருளிய திருப்பதிகம் ஐந்தாம் திருமுறையில் 43 வது பதிகமாகவும் திகழ்கின்றன. தனிப்பதிகங்களன்றி வேறு திருப்பதிகங்களில் இத்தலம் குறிப்பிடப்பெற்றிருத்தலைப் பின்வரும் அட்டவணையால் அறியலாம். அட்டவணையில் முதலில் குறிப்பிடப் பெறும் எண் திருமுறை எண். இரண்டாவது குறிப்பிடப்பெறும் எண் பதிக எண், மூன்றுவதாகக் குறிப்பிடப்பெறுவது பாடல் எண். 23-9-1, 5-35-5, 6-2-2, 6-7-1, 6-10-10, 6-13-8, 6-22-5, 6-25-10, 6-9-7, 6-70-10, 6-71-4, 6-82-9.

கல்லால் நிழன்மேய கறைசேர் கண்டாவென்(று)
எல்லா மொழியாலு மிமையோர் தொழுதேத்த
வில்லால் அரண்மூன்றும் வெந்து விழவெய்த
நல்லான் நமையாள்வான் நல்லம் நகரானே.

நலமார் மறையோர்வாழ் நல்ல நகர்மேய
கொலைசேர் மழுவாணக் கொச்சை யமர்ந்தோங்கு
தலமார் தமிழ்ஞான சம்பந் தன்சொன்ன
கலைக ளிவைவல்லார் கவலை கழிவாரே. – சம்பந்தர்.

பொக்கம் பேசிப் பொழுது கழியாதே
துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ
தக்கன் வேள்வி தகர்த்த தழல்வண்ணன்
நக்கன் சேர்நல்லம் நண்ணுதல் நன்மையே.

தமக்கு நல்லது தம்முயிர் போயினுல்
இமைக்கும் போது மிராதிக் குரம்பைதான்
உமைக்கு நல்லவன் தானுறை யும்பதி
நமக்கு நல்லது நல்ல மடைவதே.

உரைத ளர்ந்துட லார்நடுங் காமுனம்
தரைவி டையுடை யானிடம் நல்லமே
பரவு மின்பணி மின்பணி வாரொடே
விரவு மின்விர வாரை விடுமினே. – நாவுக்கரசர்.

## 2. திருக்கோழம்பம்

இத்தலம் தஞ்சைமாவட்டத்தில் நரசிங்கன்பேட்டைபுகைவண்டி நிலையத்திலிருந்து தென்கிழக்கே 4 கி.மீட்டர் தூரத்தில் உள்ளது. மாயூரத்திலிருந்து பேராவூர் செல்லும் பேருந்தில் திருவாலங்காடு, திருவாவடுதுறை வழியாகச்சென்று மல்லார் பேட்டையில் இறங்கி, தெற்கே 1 கி. மீட்டர் தூரம் சென்றால் இத்தலத்தை எளிதில் அடையலாம். மட்சாலை உள்ளது. கும்பகோணம் காரைக்கால் வழியில் பேருந்தில் வருவோர் புதூரில் இறங்கி வடக்கே 2 கி. மீ. தூரம் வரவேண்டும். மட்சாலை உள்ளது.

**தலப்பெருமை :-** இத்தலம் சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் முப்பத்தைந்தாவது தலம். ஞானசம்பந்தர் நாவுக்கரசர் பாடியருளிய இரண்டு திருப்பதிகங்களைப்பெற்றது இத்திருக்கோயில். அம்பிகை பசு உருக்கொண்டு சாபநீக்கம் கருதிப் பல தலங்களையும் வழிபட்டுக்கொண்டு ஆவடுதுறைக்கு வரும்போது இத்தலத்தை அடைந்து வழிபட்டு அருள் பெற்றார் என்பது தலபுராணம். பசுவின் காற்குளம்பு இடறியபோது வெளிப்பட்ட மூர்த்தி இங்குள்ள பெருமான் ஆதலின் கோகிலேசுரர் என வழங்கப்பெறுகிறார். பசுவின் குளம்பு சிவலிங்கத்தில் ஆவுடையாரில் காணப்படுகிறது. தலம் திருக்கொளம்பியம் திருக்கோழம்பம் என வழங்கப்பெறுவதாயிற்று. கோழம்பம் என்பதற்குக் குழப்பம் என்று பொருளுண்டு ஆதலின் பகைவர்களின் குழப்பம் நிகழ்ந்த இடம் என்று வரலாற்றாசிரியர் கருதுவர்.

திருமுறைவாணர்கள் திருமுறை ஓதுதற்கு முன்னால் விநாயக வணக்கம் கூறியபின் முருகவணக்கமாக இத்தலத்திருப்பாடலாகிய,

சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்
குமரன் தாதைநற் கோழம்பம் மேவிய
அமரர் கோவினுக்கு அன்புடைத் தொண்டர்கள்
அமர லோகமது ஆளுடை யார்களே.

என்ற பாடல் இத்தலத்திறைவன்மீது அப்பர் பாடியருளியதாகும்.

சந்தன் என்னும் வித்தியாதரன் தேவேந்திரனால் குயிலாகப் போகும்படி சாபம்பெற்று இத்தலத்திற்கு வந்து இறைவனை வழிபட்டுப் பழைய உருவம் பெற்றான் என்பது இத்தலத்தின் சிறப்பு வரலாறு.

**கோயிலமைப்பு :-** சின்னஞ்சிறிய கிராமம். நாற்புறமும் வயல்களும் சோலைகளும் சூழ்ந்துள்ளன. கோயில் ஊர்நடுவே கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மிகவும் பழுதடைந்துள்ள இக்கோயில் விரைவில் திருப்பணிகள் செய்யப் படவேண்டிய நிலையில் உள்ளது. எதிரே திருக்குளம், கட்டைக்கோபுர வாயிலைக் கடந்தவுடன் வெளிப்

பிராகாரம். நந்தி பலிபீடங்களை அடுத்து வசந்தமண்டபம் அடிப் பகுதிமட்டும் உள்ளது. அடுத்து அம்பாள் கோயில்.

அம்பாள்கோயிலை அடுத்து இராஜகோபுரம் மூன்று நிலைகளை உடையதாய்ப் பழுதடைந்தநிலையில் காணப்படுகிறது. அதைக் கடந்து உள்ளே சென்றால் மகாமண்டபம். நடராஜர்எழுந்தருளும் விமானப்பகுதி இடிந்து சிதைந்துள்ளது. உட்பிராகாரத்தில் மேற்குப் பகுதியில் கன்னி மூலையில் விநாயகர் அதையடுத்து அப்பர், முருகன், சிவலிங்கம், கஜலக்ஷ்மி திருவுருவங்கள் உள்ளன. வடக்குப் பிரா காரத்தில் சண்டேசுரர் கோயில்உள்ளது. மகாமண்டபத்தில் பைரவர் உள்ளனர்.

கர்ப்பக்கிருகக் கோஷ்டங்களில் தெற்கே விநாயகர் நடராஜர் அகத்தியர் சட்டைநாதர் தஷிணாமூர்த்தி ஆகியோரும், மேற்கே இரு புறங்களிலும் திருமால் பிரமர் திருவுருவங்கள் விளங்க இலிங்கோற்பவ மூர்த்தியும், வடக்கே பிரமன், இடபாருடர், துர்க்கை, பிக்ஷாடனர் திருவுருவங்களும் உள்ளன. சோழமன்னர்களின் திருப்பணிகளைப் பெற்றுள்ள இக்கோயில் சிற்பங்கள் கோனேரிராசபுரம் திருக்கோயி லமைப்பை ஒத்துள்ளது.

அர்த்தமண்டபத்தில் நந்தி பலி பீடங்கள் விநாயகர் துவார பாலகர் விளங்குகின்றனர். கருப்பக்கிருகத்தில் அருள்மிகு கோகிலே ஸ்வரர் விளங்குகின்றார். இக்கோயிலின் திருவுலாத் திருவுருவங்கள் அனைத்தும் வேறுகோயிலில் பாதுகாப்பாக வைக்கப் பெற்றுள்ளன. சந்தியில் நின்று,

நீற்றானை நீள்சடைமேல் நிறைவுள்ளதோர்
ஆற்றானை அழகமர்மென் முலையாளையோர்
கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்பம் மேவிய
ஏற்றானை ஏத்துமின் நும் இடர் ஏகவே.

என்ற தேவாரப் பாடலை ஓதி வழிபடலாம்.

வெளிப்பிராகாரத்தில் அம்பாள் கோயில் உள்ளது. அருள்மிகு சௌந்தரநாயகி தன் பெயருக்கு ஏற்ப அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத அம்மையாகத் திகழ்கிறாள்.

**தேவாரத் திருப்பதிகங்களும் பாடல்களும் :-** திருக்கோழம் பத்திற்கு ஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகம் இரண்டாம் திருமுறை யில் பதின்மூன்றாவது திருப்பதிகமாகவும் அப்பர் அருளிய திருப்பதிகம் ஐந்தாம் திருமுறையில் அறுபத்துநான்காவது திருப்பதிகமாகவும் விளங்குகின்றன. வேறு திருப்பதிகங்களிலும் இத்தலம் இடம் பெற் றுள்ள விபரம் கீழேதரப்படுகிறது. முதல் எண் - திருமுறை. இரண் டாவது எண் - பதிகம். மூன்றாம் எண் - பாடல். 2—39—7, 6—17—3, 6—75—2.

தேவிபாகவதக் கதை 3.

# "உண்மைகள் உலவுகின்றன"

## வித்துவான். திரு. கா ம. கண்ணப்பன்

சரியாதி அரசனின் ஒரே மகள் சுகன்னியா. தான் செய்த பிழையை எண்ணித் தன்வாழ்வையே தியாகம் செய்த உத்தமி அந்த அரசிளங்குமரி.

முள்ளால் கண்ணைக் குத்திய பாவத்திற்காக முனிவருக்குப் பத்தினியான அவள்வரலாறு புனித வரலாறு!

கண்ணிழந்த வயதான கணவருக்கு அவள்கற்பும் கடமையுணர்வும்தான் இரண்டு கண்கள்! இரண்டு கால்கள்! இரண்டு கைகள்.

அவள் தன் இளமையைக் கற்பிலே கலந்தவள்! தன் அழகினைக் கடமையிலே கரைத்தவள்! தன் சுகத்தைப் பணிவிடையிலே பங்கு போட்டவள்!

என்ன ஆனால் என்ன? பெண்ணுக்கு இளமை ஒருபகை; அழகு அவளுக்கு ஒருவிரோதி!

இளமையும் அழகும் இறைவனால் அளிக்கப்பெற்ற பெண்கள், தம் கற்பைக்காக்க உலகில் எதிர்நீச்சல் போடவேண்டியிருக்கிறது.

சுகன்னியா விதிவிலக்கா? அவள்வாழ்விலும் சூறாவளி வீசி வீசிச் சுழற்றியது.



அடர்ந்து படர்ந்து கிடந்தது அந்தக்காடு. அதன் நடுவே அழகான சிற்றோடை. சலசல என ஓடும் அந்த ஓடையில் குளித்துவிட்டுத் தன் தளிர்மேனி அசைய அன்னநடையிட்டு, ஆசிரமத்தை நோக்கி அடியெடுத்து வைத்தாள் சுகன்னியா.

"உத்தமப்பெண்ணே! சற்று நில்" — இரண்டு இளைஞர்கள் அவளை இடை மறித்து நிறுத்தினார்கள்.

இனிய நாதத்தை இசைத்துக்கொண்டிருந்த சுகன்னியாவின் இதயம் பறையடிக்கத்தொடங்கியது.

"அழகுத் திருவுருவே! இளமைவளர் பெட்டகமே! அசைந்து நடந்துவரும் அன்னமென நின்றவளே!" — எதிரில் நின்ற இருவரும்

சுகன்னியாவின் அழகினை ஒரு கவிஞனைப்போல வருணித்துக் கொண்டே இருந்தார்கள்.

சுகன்னியாவின் முகம் சிவந்தது; நாணத்தால் மட்டும் அன்று; அவள் நாணயத்தால்......அச்சத்தால்......கற்புக்குருதி உடலெங்கும் கனன்று ஓடியதால்!

" உன் பாதம் பூமியில் பட்டுப் பளபளப்பை இழக்கிறது; உன் அழகு இந்தக் கொடிய காட்டில் குலைந்துபோய்க்கொண்டிருக்கிறது; உன் இளமையும் அழகும் எங்கள் உள்ளங்களை நார்நாராகக் கிழித்துப் போடுகிறது "

சுகன்னியா முகத்தைத் திருப்பிக் கொண்டாள்

" நீ யார்? அரசிளங்குமரிபோல் இருக்கிறாயே! உன் கணவர் யார்? உனக்கு ஏன் இந்தத் தவ உடை? என்ன குறை உனக்கு ஏற்பட்டது?"

கேள்விகள் கணைகளாகப் புறப்பட்டன; சுகன்னியா பதில்கூறத் தயாரானாள்; ஏனென்றால் மௌனம் சமயத்தில் விபரீதத்தை உண்டு பண்ணிவிடக்கூடும்!

"நீங்கள் யார்?" — கேள்வி பிறந்தது.

"சூரியபுத்திரர்கள்; அஸ்வனி தேவதைகள் என்று எங்களைச் சொல்வார்கள்."

"என்பெயர் சுகன்யா; சரியாதி அரசனின் ஒரேமகள்; குருடரான வயதான ஒருநல்ல முனிவரின் பத்தினி நான்; தவமுனிவரின் தொண்டு அல்லாமல் உலக இச்சைகளிலே கருத்தைச் செலுத்துபவள் அல்லள் நான்"

சுகன்னியா தன் நெடுங்கதையைச் சிறுகதையாகச் சொன்னாள். சொல்லப்போனால், விடுகதைபோலச் சிலவரிகளிலேயே சொல்லி விட்டாள்.

" பெண்ணே! அரசகுடும்பத்தில் ஒரே மகளாய்ப் பிறந்த நீ சுகபோகங்களை அனுபவிக்காமல், மான்தோலைத் தரித்து, இளமையைக் கொன்றழிக்கும் உன்னைக் கண்டு நாங்கள் மிகவும் மனம் தளர்கிறோம்; இளமையின் அருமையை இன்னொரு இளமைதானே நன்றாக உணரமுடியும்"

சுகன்னியா மனம் புழுங்கினாள்; அவர்கள் அறியாமையையும், விகாரமான எண்ணங்களையும் எண்ணித் தனக்குள்ளே சிரித்துக் கொண்டாள்.

"இளமையும் அழகும்.........தவமும் வயோதிகமும் உடைய வருக்குச் சொந்தம்! கிழவருக்குக்குமரி! குருடருக்கு அழகி! சுகன்னியா! நீ உன்னை அழித்துக்கொள்கிருய்"

சுகன்னியா, தன் கணவரை உள்ளத்தில் தெய்வமாக ஆராதிக்கிருள்; 'அபசார வார்த்தைகளைக் கேட்கவேண்டி இருக்கிறதே' என்று தன் காதுகளைப் பொத்திக்கொண்டாள்.

சூரியபுத்திரர்கள் விடுவதாயில்லை; மேலும் பேசினர்.

"நாங்கள் சொல்வதைக்கேள்; ஒன்றுக்கும் உதவாத கிழவரால், அந்தக்குருடரால் உன்னழகை ரசிக்கமுடியாது! அவரைவிட்டு உடனே நீங்கு; அரசகுமரி நீ; நாங்கள் இளைஞர்கள்; எங்களில் ஒருவரே உனக்குப் பொருத்தம்; நீயே தேர்ந்தெடுத்துக்கொள்"

அந்த மாயைச் சொற்கள் உடைந்த கண்ணுடிச் சிதறல்போல் ஒலித்தன சுகன்யாவிற்கு!

"போதும் உங்கள் அறவுரை; நீங்கள் சூரிய புத்திரர் என்று சொல்லிக்கொள்ள அருகதை அற்றவர்கள்; ஓர் உத்தமியின் சாபம் உடனே பலித்துவிடும் என்பது உங்களுக்கே தெரியும்; காம விகாரத்தால் கண்டதையும் பேசும் உங்களைக் கணப்பொழுதில் அழித்திட முடியும்; அதைச்செய்ய நான் தயாராய் இல்லை"

சுகன்யா கடுகி நடக்க முற்பட்டாள்.

அஸ்வனி தேவதைகள் அஞ்சினர்; வியந்தனர்; அவள் பத்தினித் தவம் அவர்களுக்குப் பெருமகிழ்ச்சி தந்தது.

"உத்தமியே! உன் பதிவிரதா தர்மத்தை மெச்சினேம்; உனக்கு ஒன்று செய்ய எண்ணியுள்ளோம்; நாங்கள் தேவதைகள் ஆனதால் நீ விரும்பும் எதையும் கேட்கலாம்; கேள்"

அவள் பதிலே பேசவில்லை.

"உன் கணவரைக் கண்ணுடையவராக்குவோம்; அவர் ஒளி பெற்ற கண்களோடு, அழகுமிக்க இளைஞராகவும் ஆவார்"

சுகன்னியா தன் கணவரின் நலத்தைத் தவிர வேறு எண்ணம் இல்லாதவள்; ஆகவே ஆவலோடு அவர்களை; 'எப்படி' என்பது போல் பார்த்தாள்.

"நாங்கள் இருவர், உன் கணவர் ஆகிய மூவரும் ஒரேமாதிரி உருவம் முதலியவற்றேடு உன் எதிரில் நிற்போம்; மூவரில் உன் கணவரைக் கண்டறிந்து மாலையிடவேண்டும்; அப்போதுதான்..."

சுகன்னியா கலக்கமுற்ருள்! அவளுக்குக் கடவுள் துணை செய்யும் என்ற நம்பிக்கை உண்டு!

நேரே ஆசிரமம் சென்று, தன் கணவராகிய முனிவரிடம் நிகழ்ந்தவைகளைக் கோவையாக எடுத்துச் சொன்ளுள்; அனுமதியும் பெற்ருள்.

சூரிய புத்திரர்கள் சுகன்னியாவின் ஒப்புதலோடு, ஆசிரமத்திற்கு வந்தனர்.

“உத்தமச் செல்வியே! இதோ இங்கிருக்கும் தடாகத்தில் நாங்கள் இருவரும் மூழ்கும்போது உன் வயதான கணவரும் மூழ்க வேண்டும்;”

மூவரும் தடாக நீரில் மூழ்கினர்; எழுந்தனர்.

மூன்றுபேரும் ஒரே நிறம்! இளமை! அழகு! உடல் வலிமை! ஒரேவிதமான குரல்! ஒரேமாதிரியான ஆடை, அணிகலன்கள்!

”எங்கள் மூவரில் யாரிடத்தில் உனக்கு விருப்பமோ, அவரைக் கணவராகக் கொண்டு மாலையிடு”

சுகன்னியா தன் விரல்களாலே கண்ணைக் குத்திக் கொண்டது போல் பரிதவித்துப் போனுள்.

“நான் எப்படியாவது என் கணவரைக் கண்டறிவேன்; இயலாது என்ருல் மாண்டுபோவேன்” என உறுதி எடுத்துக் கொண்டாள்.

கலங்கி நிற்கும் நேரத்தில் கடவுள்தானே துணை!

“உலகமெல்லாம் காக்கின்ற தாயே! நீயே கதி; உன்னையன்றி என் நிலை அறிவார் யாருமில்லை; நீ காட்டுகின்ற தாய்; நான் கண்டறியும் குழந்தை! யோகிகளுக்கும் வெற்றிநல்கும் அன்னையே! நீயே சரணம்” என்று அன்னை பராசக்தியை உள்ளத்தே நிறுத்திப் பலவாறு வேண்டினுள்.

எல்லாச் சத்தியும் படைத்த அன்னை, சுகன்னியாவிற்கு - உத்தம பதிவிரதைக்குத் தன் கணவரை அறியும் சக்தியை நல்கினுள்.

அன்னை அருளைப் போற்றியவாறே இளமையும் அழகும் பெற்ற இனிய கணவரைக் கண்டறிந்து மாலை சூட்டினுள் சுகன்னியா.

★

அழகு ஆபத்தை நல்கலாம்; இளமை இடர்களைத் தோற்று விக்கக்கூடும்!

ஆசைவார்த்தைகளைக்கேட்டு உத்தமி மனத்தை அலைபவிட மாட்டாள்; அவளுக்குக் கற்பிலேதான் ஆசை!

உத்தம பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்! அன்னை அருள் தருவாள்!

— இப்படிச் சில உண்மைகள் தங்கள் உருவத்தை எக்காலத்திலும் மாற்றிக்கொள்வதில்லை; அவை என்றும் இளமையோடு உலவிக் கொண்டே இருக்கின்றன.



# அன்னை அருள்மாலை

திருமுறைக்கலாநிதி

**வேலூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

அவளிவள் நல்லூரமர் சௌந்தர நாயகி
அப்பனுரை பரிதிநியமம்
அம்மைமங் களநாயகிதிரு வெண்ணியில்
அழகியநா யகிபூவனூர்த்
தவமுனிவர் பரவுகற் பகவல்லி திருப்பா
தாளீச்சு ரத்தலத்தில்
தங்கியரு ளும்அமிர்த நாயகி திருக்களர்
தனிலழ கேஸ்வரியே
சிவனுறை சிற்றேமம் அகிலாண்ட நாயகி
திருவுசாத் தானந்தினமே
சிந்திப் பவர்சிந்தை யுறைபெரிய நாயகி
திருஇடும் பாவனத்தில்
பவப்பிணி யகற்றிடும் மங்கள நாயகி
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
பணிவேற் கருள் அன்னையே. (21)

# அறம் கூறும் அரிய நூல்கள்

பேராசிரியர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.

**நூல் அறிமுகம் :**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றுன 'சிறுபஞ்ச மூலம்' என்னும் நூல்பற்றிச் சிந்திப்போம். இந்நூலை இயற்றியவர் காரியாசான் ஆவார். இந்நூல் பாயிரச் செய்யுள் உள்பட 100 செய்யுட்களைக் கொண்டது. வெண்பா யாப்பில் ஆனது இது.

மருத்துவநூலிற் கூறப்பட்ட கண்டங்கத்தரிவேர், சிறுவழுதுணை வேர், சிறுமல்லிவேர், நெருஞ்சிவேர், பெருமல்லிவேர் ஆகிய பஞ்ச மூலங்கள் மக்கள் பிணிகளைத் தீர்ப்பதுபோல, இந்நூல் தன்னிடம் உள்ள ஒவ்வொரு செய்யுட்களிலும் அடங்கிய ஐந்தைந்து பொருள் களாலும், படித்துணர்கின்றவரின் பிறவிநோயைப்போக்கத்தக்க நல்ல நெறிகளை விளக்கிக்காட்டுகிறது ஆதலின் இப்பெயர்பெற்றது.

இந்நூலின்கண் அமைந்த ஒரு பாடல், பஞ்சத்தைத் தீர்க்கும் மழையைப்போல மக்களின் வினைகளைத் தீர்க்கும் சிறுபஞ்சமூலம் என்று கூறியுள்ளது.

" உறுபஞ்ச மூலம்தீர் மாரிபோல் கூறீர்
சிறுபஞ்ச மூலம் சிறந்து "

என்பது அப்பாடலிலுள்ள வரிகள்.

**வனப்பு வகைகள் :**

உலகில் உள்ள மாந்தர்கள் அனைவரும் தங்களைத் தாங்கள் அலங்காரம் செய்துகொள்ள ஆசைப்படுபவரே. இவர்களில் விதிவிலக் கானவர்கள் மிகவும் குறைவு. ஆனுல் இலக்கியமும் அறநூல்களும் அழிந்துபோகும் புற அழகினை அழகு என்று எப்பொழுதும் கூறுவது இல்லை. அழியாத அழகும் பிறருக்குப் பயன் அளிக்கக்கூடிய அழகுமே அறநூல்கள் கூறும் அழகாகும். இதனைச் சிறுபஞ்சமூலம் ஒருபாடலில் மிக அழகாகக் கூறுகிறது. தலைமுடிவனப்பும், கண்களைக் கவரும் மார்பு வனப்பும், நகத்தினுல் வரும் வனப்பும், காதினுல் வரும் வனப்பும், அழகிய பல்வரிசையினுல் வரும் வனப்பும் ஒருவற்கு

உண்மையான வனப்பு அல்ல ; நூல்களைக் கற்றுத் தெளிந்தமையால் உண்டாகும் சொல்லாற்றலால் வரும் வனப்பே உண்மையானவனப்பு என அந்நூல் கூறுகிறது.

" மயிர்வனப்பும் கண்கவரும் மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின் வனப்பும் — செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு "

— பா. எ. 37

என்பது அப்பாடல்.

மேலும் அந்நூல், நம் உடலுறுப்புக்களுக்கும் இவ்வுலகில் வாழும் அரசனுக்கும் எவையெவையெல்லாம் அழகு ஆகும் என்று தெரிந்து கூறுகிறது.

நம் கண்களுக்கு அழகு கண்ணோட்டமாயிருத்தல் என்றும், காலிற்கு அழகாவது பிறர்மாட்டு இரந்து சொல்லாதிருத்தல் என்றும், ஆராய்ச்சிக்கு அழகு எதனையும் துணிந்து சொல்லுதல் என்றும், பாடும் இசைக்கு அழகு கேட்போர் மிகவும் நன்றென்று பாராட்டிக் கூறும் வார்த்தைகள் என்றும், அரசனுக்கு அழகு அவன் நாட்டில் வாழும் குடிமக்கள் அவன் நல்லவன் என்று கூறிப் பாராட்டுதல் என்றும் அப்பாடல் அழகுறக் கூறுகிறது.

" கண்வனப்புக் கண்ணோட்டம் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப்பு இத்துணையாம் என்றுரைத்தல் - பண்வனப்புக்
கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் றன்னாடு
வாட்டான்நன் றென்றல் வனப்பு."

— பா. எ. 9

" கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம் " எனும் வள்ளுவர் வாக்கு ஈண்டு நினைவுகூரத்தக்கது. இப்பாடலில், காலிற்கு வனப்புப் பிறர்மாட்டு இரந்து செல்லாமை எனும் கருத்து, தமிழன்நெஞ்சத்தில் பிச்சை எடுத்தல் எவ்வளவு இழிவாகக் கருதப்பட்டது என்பதனை நமக்கு நன்கு படம்பிடித்துக்காட்டுகிறது. இதுபோன்ற சங்கப்புலவர் களின் சிந்தனை எண்ணியெண்ணிப் பாராட்டத் தகுந்தது ஆகும்.

**எமனும் எத்தனை வகை :-**

இவ்வுலகில் மனிதனுக்கு மனிதனே எமனாக மாறிவிடுவதனைப் பலர் வாழ்வில் காணுகின்றோம். ஆனால் சில ஜீவராசிகளின் இயற்கை நிலையில் ஆண்டவன் வேடிக்கையாக அதற்கு அழிவினை வைத்துள்ளான் எனும் இரகசியத்தினை, இப்புலவர் கண்டு நமக்குக் காட்டுகின்றார்.

சிலந்திப்பூச்சிக்கு அதன்முட்டையே எமனாகவும், மிருகங்களுக்கு அதன் கொம்புகளே எமனாகவும், மானமுள்ள கவரிமானுக்கு அதன் முடியே எமனாகவும், நெண்டிற்கு அதன் பார்ப்புகளே எமனாகவும் இருக்கிறது என்று கூறிய புலவர், மனிதனுக்கு எது என்று ஆய்ந்து கூறுகிறார். மனிதனுடைய பெருமையையும் சிறுமையையும் உலகிற்கு எடுத்துரைக்கும் நாவிற்கு அதன் நன்றல்லாத சொற்களே எமனாக மாறிவிடுகிறது என்று கூறுகிறார் ஆசிரியர்.

"சிலம்பிக்குத் தன்சினை கூற்றம்நீள் கோடு
விலங்கிற்குக் கூற்றம் மயிர்தான் — வலம்படா
மாவிற்குக் கூற்றமாம் நெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை" பா. எ. 11

என்பது அவர் பாடிய பாடல்.

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்" எனும் வள்ளுவர் வாக்கு ஒப்புமைப்படுத்திப் பார்க்கக் கூடியது. "யா காவாராயினும் நா காக்க" என்று வள்ளுவர் எச்சரிப்பதனை இவரும் இங்கே வலியுறுத்திக் கூறுகிறார். "கொட்டினால் அள்ளமுடியாது" எனும் பழமொழியும் இதனை வலியுறுத்துவதை நாம் உணர முடிகின்றது.

**உடம்பு வாராமைக்குரிய வழி :-**

இந்த உடம்பினை ஆண்டவன் நமக்குக்கொடுத்ததே இனிமேலும் நம் ஆன்மா வேறு ஓர் உடம்பினைப் பெறாமலிருக்க, இவ்வுடம்பினால் எவையேனும் நல்லனவற்றைச் செய்துகொள்ளச்சொல்லியே ஆகும் என்பதனை அருளாளர்கள் பலரும் வலியுறுத்தி வந்துள்ளனர்.

பிறந்த உடம்பினால் இனிப் பெற இருக்கும் உடம்பினைத் தவிர்த்துக்கொள்ளலாம் என்று கூறினால் அது எப்படி எனும் கேள்வி வருகிறது. அக்கேள்விக்கு விடைகூறுவது போல இவ்வாசிரியர் ஒரு பாடலில் விளக்கம் கூறுகிறார்.

பொன்னையே பெற்றாலும் பொய்சொல்லாமையும், பிறர் பொருளைக் களவு கொள்ளக் கருதாமையும், எளியர் என்று எண்ணி வையாமையும், பெண்களை விரும்பினாலும் உள்ளம் அதன்பொருட்டுத் தளராமையும், தன் உடம்பு தளராமலிருக்கப் பிறிதொன்றன் உடம்பைத் தின்னாமையும்கொண்டு வாழ்ந்தால் பிறிதோருடம்பு பெறல் இல்லை என்கின்றார்.

"பொய்யாமை பொன்பெறினும் கள்ளாமை மெல்லியலார்
வையாமை வார்குழலார் நச்சினும் — நையாமை
ஓர்த்துடம்பு பேருமென்று ஊனவாய் உண்ணுனேல்
பேர்த்துடம்பு கோட லரிது" பா. எ. 19

என்பது அப்பாடல். இப்பாடலில் "எளியர் என்று எண்ணி வையாமை" என்று கூறும் கருத்து, புறநானூறு கூறும் கருத்தோடு ஒப்புமைப்படுத்திக் காணமுடிகிறது. புறநானூற்றில் ஒரு பாடலில் நம்பி நெடுஞ்செழியன் எனும் மன்னனைப்பற்றிக் கூறும் பொழுது, "ஒருவன் வன்மையானவன் என்று வழிமொழிவதும், மற்றொருவன் மென்மையானவன் என்று மீதுறப் பேசுவதும்" இவ்வரசனிடம் இல்லை என்று பேரெயில் முறுவலார் எனும் புலவர் கூறுகிறார்

"வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்"

என்பன அப்பாடலிலுள்ள வரிகள். நம்நாட்டிலுள்ள மக்களிடையே இப்பழக்கம்மட்டும் இன்று நடைமுறைக்கு வந்தால்போதும்; பல பிரச்சனைக்கு உண்மைத்தீர்வு கிடைக்கும்; ஐயமில்லை.

(தொடரும்)

---

## தில்லையில்

# தூணில் வளர்ந்துவரும் ஸ்ரீ தண்டாயுதபாணி

தில்லை ஸ்ரீ நடராஜப்பெருமான் திருக்கோயிலில், கொடிமரத்தின் மேல்பக்கம் தூணில் காட்சி அளித்துக் கொண்டு வருகின்ற ஸ்ரீ தண்டாயுதபாணி, சென்ற 40 ஆண்டு காலத்தில் ஒரு அங்குலத்திற்குமேல் முன்பக்கம் சிறிது வளர்ந்துகொண்டுவந்து காட்சி தருகின்றார்.

சிறுபுஷ்பசரம்கூட முன்னர் இச்சிலையின்மீது சார்த்தமுடியாமல் காட்சி அளித்துள்ள பெருமான், இப்பொழுது சிறு புஷ்ப மாலையை நன்கு சார்த்தும்படி செய்யக்கூடிய நிலையில் ஸ்ரீ தண்டாயுதபாணி வளர்ந்துவந்துள்ளார்.

மா. பாலசுப்பிரமணியன்,
நிருபர், சிதம்பரம்.

# தஞ்சை மாவட்டத்தின் சிறப்பு

## (வரலாற்று நோக்கில் ஒரு கண்ணோட்டம்.)

பேராசிரியர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ.

**மூவேந்தர் :**

'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே - வாளொடு முன் தோன்றி மூத்தகுடி' எனத் தமிழர் குடிவரவினை முன்னோர் குறித்துள்ளனர். 'தொல்குடி' என்பதனை விளக்கவந்த திருக்குறள் உரைகாரர் பரிமேலழகர் 'படைப்புக்காலந்தொட்டு மேம்பட்டு வரும் சேர, சோழ, பாண்டியர் போல' எனக் குறிக்கின்றார். வரலாற்றின் பார்வை ஊடுருவ இயலாத தொன்மைக் காலந்தொட்டே தமிழகம் சேர, சோழ, பாண்டியர்களால் பகுத்தாளப்பட்டு வந்துள்ளது. இம்மூன்று நாடுகளுள் இடை நிற்கும் சோழநாடு, காவிரி தந்த கொடையால் நிலவளமும், நாயன்மார்கள் ஆழ்வார்கள் வரவால் பக்தி வளமும் நிரம்பித் தலைசிறந்து விளங்கலாயிற்று.

**தலைநகரங்கள் :**

சோழநாடு என்ற குறியீட்டுள், தற்போதுள்ள பகுப்பின் வண்ணம் தஞ்சை மாவட்டம் முழுவதும் - மற்றும் புதுவைப் பகுதியின் காரைக்காலும், திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, தென்னார்க்காடு மாவட்டங்களின் சில பகுதிகளும் அடங்கும். இவற்றுள் காவிரியின் முழுப்பயனையும் பெற்று நின்று, 'சோழநாடு சோறுடைத்து' என்ற பழமொழிக்கு மூலகாரணமாய் நிற்கும் பெருமை தஞ்சை மாவட்டத்திற்கே உரியது. சங்ககாலந்தொட்டுச்சோழ மன்னர்களின் தலைநகரங்களாக விளங்கிய திருவாரூர், உறந்தை எனப்படும் உறையூர், காவிரிப்பூம்பட்டினம், பழையாறை, தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம் என்ற தலைநகரங்களுள், உறையூரும் கங்கை கொண்டசோழபுரமும் தவிர எஞ்சிய தலைநகரங்கள் யாவும் தஞ்சை மாவட்டத்தில் அமைந்திருக்கக் காண்கின்றோம்.

**முதற்குறிப்பு :**

வரலாற்று நோக்கில் தஞ்சாவூர் என்ற சொல் கி. பி. 9 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே காணப்படுகிறது. 'தஞ்சைத் தளிக் குளத்தார்' என்ற திருவிசைப்பாக் குறிப்பும், பிற்காலச் சோழப் பேரரசை நிறுவிய விஜயாலய சோழன் தஞ்சையில் 'நிதம்பசூதனி'

என்ற அம்மைக்குக் கோயில் ஒன்று எடுத்த கல்வெட்டுச் செய்தியுமே 'தஞ்சை' பற்றிய முதற்குறிப்புக்களாகக் காணப்படுகின்றன. தஞ்சையில் ஆண்டிருந்த முத்தரையர்களை வென்று பழையாறை தலைநகரைத் தஞ்சைக்கு மாற்றியவன் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில்வாழ்ந்த விஜயாலய சோழனே ஆவான். சோழப் பெருநாடு ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில்தான் இன்று உள்ளதுபோல் தஞ்சை, திருச்சி மாவட்டங்களாகப் பகுக்கப்பெற்றன.

**எல்லைகள் :**

வடக்கே கொள்ளிடத்தையும், கிழக்கே நீண்ட வங்கக்கடலையும், தெற்கே பேராவூரணிப் பகுதியையும், மேற்கே திருக்காட்டுப்பள்ளி, பூதலூர்பகுதிகளையும் எல்லைகளாகக்கொண்ட, நிலவளமும் நீர்வளமும் மிக்க பெருநிலப்பரப்பே இன்றைய தஞ்சை மாவட்டம். சோழநாடு என்ற பார்வையை விடுத்து, இன்றுள்ள தஞ்சை மாவட்டம் என்ற எல்லையை நினைவிற் கொண்டு நோக்கினாலும் சோழநாட்டின் வளங்களெல்லாம் தஞ்சைத் தரணியையே மையமாகக் கொண்டு சிறந்தன என்பது நன்கு விளங்கும். காவிரி நாற்பதற்கும் மேற்பட்ட சிற்றாறுகளாகப் பிரிந்து தஞ்சையைத் தழுவி நின்று வளங்காட்டுகின்றது. தமிழ் நாட்டின் நெற்களஞ்சியம் என்ற பெருமை தஞ்சை மாவட்டத்திற்கே உரியது.

**எல்லையில்லாப் பெருமை :**

சங்க காலத்துப் பெரும் புலவர்களில் நூற்றுக்கும் மேற்பட்ட புலவர்கள் பிறந்து வாழ்ந்து செந்தமிழ் வளர்த்த பெருமை தஞ்சை மண்ணிற்கே உரியது. சைவ சமயாசாரியர்களுள் முதல்வராகிய திருஞானசம்பந்தப் பெருமானும், பெரியபுராணச் சீரடியார்களுள் இருபத்தொன்பதற்கும் மேற்பட்ட அருளாளர்களும், ஏனைய திருமுறையாசிரியர்கள் பலரும் பிறந்து, மொழி பயின்று சிறந்த பெருமை தஞ்சைக்கு உண்டு. உலகிற்கே பக்தி இயக்கத்திற்குத் தலைமை தாங்கும் சிறப்பு இம்மண்ணுக்கு உண்டு. தேவார மூவர்களால் பாடல்பெற்ற சிவத்தலங்களுள் 158 தலங்களும், பன்னிரு ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்விக்கப்பெற்ற முப்பத்துமூன்று ஸ்ரீ வைஷ்ணவத் தலங்களும் தஞ்சை மண்ணின் பக்தி வளத்திற்குச் சான்று கூறி நிற்கின்றன. அட்ட வீரட்டத் தலங்களுள் ஆறும், சப்தவிடங்கத் தலங்கள் ஏழும், அறுபடை வீடுகளுள் ஒன்றாகிய திருவேரகம் என்ற சுவாமிமலையோடு, சிறந்த பிற முருகன் தலங்களாகிய எட்டிகுடி, எண்கண், திருவிடைக்கழி, சிக்கல், கந்தன்குடி, புள்ளிருக்கு வேளூர் போன்றவைகளும் தஞ்சை மாவட்டத்தில் இடம் பெற்றுள்ளன.

# செய்திகள்

## சீகாழியில் ஸ்ரீ சட்டைநாதர் சிறப்பு வழிபாடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் மலைக்கோயிலின் உச்சியில் எழுந்தருளியிருந்து பல குடும்பங்களுக்குக் குலதெய்வமாக விளங்கி அருள்வழங்கும் ஸ்ரீ சட்டைநாதசுவாமிக்கு 25—5—79 வெள்ளியன்று சிறப்பு வழிபாடு நடைபெற்றது. அன்றுகாலை வலம்புரி மண்டபத்தில் ஸ்ரீ முத்துச்சட்டைநாதருக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் இரவு ஸ்ரீ முத்துச்சட்டைநாதர் பிராகாரத்தில் வலமாக எழுந்தருளலும் நிகழ்ந்தன. பின்னர் மலைக்கோயிலில் புழுகாப்பு தரிசனம் நடைபெற்றது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள். அன்று மாலை 6 மணியளவில் பேராசிரியர். திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ., அவர்கள் "ஆபதுத்தாரணர்மாலை" என்ற தலைப்பில் விரிவுரையாற்றினார்கள். அன்பர்கள் பலர் விரிவுரையைக்கேட்டும் இறைவனை வழிபட்டும் பயன்பெற்றனர்.

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 23 ஆவது குருமகா சந்நிதானம் அவர்களின் மாதஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாள் வழிபாடு 1—6—79 வெள்ளிக்கிழமையன்று சிறப்பாக நடைபெற்றது. அன்றுகாலை 8 மணியளவில் திருக்கோழம்பம் அருள்மிகு சௌந்தரநாயகி உடனாகிய அருள்மிகு கோகிலேசுவரர் ஆலயத்திலும் மாலை 7 மணியளவில் திருநல்லம் (கோனேரிராஜபுரம்) அருள்மிகு மங்களநாயகி உடனாகிய அருள்மிகு உமாமகேசுவரர் ஆலயத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் வழிபாடு சிறப்பாக நடைபெற்றது. இவ்விருதலங்களிலும் அவ்வத்தலத்தேவாரத் திருப்பதிகங்கள் பாராயணம் செய்யப்பெற்றன. மேலும் அவ்வத்தலத் திருப்பதிகங்கள் அடங்கிய நூல் குறிப்புரையுடனும் தலவரலாற்றுடனும் வெளியிட்டு அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. திருக்கோழம்பத் திருக்கோயில் வழிபாட்டின்போது வித்துவான். திரு. வி. சா. குருசாமி

தேசிகர் எம். ஏ., அவர்கள் "திருப்பதிகச்சிறப்பு" என்ற தலைப்பில் விரிவுரையாற்றினார்கள். திருநல்லம் திருக்கோயில் வழிபாட்டின்போது திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ., புலவர். திரு. சுப்பிரமணியம், திரு. கோ. சிவஞானம் ஆகியோர் முறையே "சோழர்காலச் சமயப் பணி", "சைவம் வளர்த்த மகளிர்", "ஆலயவழிபாடு" என்ற பொருள்களில் விரிவுரையாற்றினார்கள். திருநல்லம் பாரதி மன்றத்தினரும் கிராம அன்பர்களும் வழிபாட்டில் கலந்துகொண்டு பயன் பெற்றனர்.

சென்னை தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையம்

## மாதாந்தர சமயப் பிரசார வழிபாடு

மேமாதத்திய சமயப் பிரசார வழிபாடு 27—5—79 ஞாயிற்றுக் கிழமை மாலை 4-25 மணி முதல் இரவு 8-30 மணி வரை சென்னையை அடுத்த ஆதம்பாக்கத்திலுள்ள ஸ்ரீ கோமதியம்பாள் சமேத ஸ்ரீ நந்தீஸ்வரர் ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது.

ஸ்ரீ விநாயகர், சுவாமி, அம்பாள் ஆகிய மூர்த்திகளுக்கு அபிஷேக ஆராதனைகள் நடந்தன. ஆலயத்தில் உள்ள இதர மூர்த்திகளுக்கும் அர்ச்சனை செய்யப்பட்டது.

வழிபாட்டின்போது திரு. என். இராமமூர்த்தி ஐயர், குமாரி ஆர். கௌரி குழுவினர் திருமுறைப்பாராயணம் செய்து பக்திப்பாடல்களையும் பாடினார்கள்.

வழிபாட்டிற்குப் பிறகு சமயப் பிரசாரக்கூட்டம் நடைபெற்றது புலவர் திரு. எ. நாராயணசுவாமி ஐயர், சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட ஷெ ஆலயத்தின் வரலாற்றைச் சுருக்கமாகக்கூறி, எல்லோரையும் வரவேற்றுப் பேசினார்.

திரு. கே, என். கமலநாபன் இம்மாதிரி கூட்டுவழிபாடு நடத்துவதன்மூலம் நாட்டில் ஆன்மீகம் வளர்கின்றது; வழிபாட்டின்போது எழுப்பப்படும் சிவநாம ஒலியால் மக்களுக்குத் தெய்வ பக்தி ஏற்படுகிறது என்று குறிப்பிட்டு, சமீபத்தில் காசிக்குச் சென்றிருந்தபோது சிவநாம ஒலியால் தாம் அடைந்த பக்தி ஆர்வத்தை விளக்கிச் சொன்னார்கள்.

பின்னர் புலவர் திரு. எ. ஜெ. இராமசுவாமி முதலியார் சமயப் பற்றை மக்களுக்கு ஊட்டுவதற்குக் கோயிலுக்குச் சென்று வழிபடுவது தான் சாலச் சிறந்தது என்று தக்க எடுத்துக்காட்டுகளுடன் கூறினார்.

குமாரி ஆர். கௌரிபேசுகையில், மனிதன் எத்தகையபேற்றினைப் பெறுவதற்கும் இறையருளே தேவை; அத்தகைய இறையருளைப்பெற ஆலயங்களுக்குச் சென்று கூட்டுவழிபாட்டில் கலந்துகொள்வதே மேன்மையானதும் உறுதியானதும் ஆகும் என்ற கருத்தை மேற்கோள்களுடன் எடுத்துக் கூறினர்.

நிலைய சுவாமிகள் எல்லோருக்கும் நன்றி கூறியபின் கூட்டம் நிறைவு பெற்றது.

## கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா

இவ்விழா 26—5—79 சனிக்கிழமை மாலை 7 - 00 மணிக்கு நிலைய மன்றத்தில் திரு. எஸ். ஜி. இரத்தினம் அய்யர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

ஸ்ரீசெல்வமுத்துகுமாரசுவாமி படத்திற்கு அர்ச்சனை செய்தபிறகு திரு. என். இராமலிங்கம், திரு. என். இராமமூர்த்திஐயர், குமாரி ஆர். கௌரி ஆகியோர் வேளூர்ப் பதிகங்களும் முருகன் நாமாவளிகளும் பாடினர்கள்.

நிலைய சுவாமிகளின் வரவேற்புரைக்குப் பிறகு, தலைவர் திரு. எஸ். ஜி. இரத்தினஐயர் அவர்கள் பேசுகையில், கிருத்திகைப் பிரசாத மகிமையைப்பற்றி விளக்கி, ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பொது ஜனங்களின் நலனைக்கருதி இப்பிரசாதம் வழங்கும் விழாவைச் சென்னையில் சிறப்பாக நடத்திவருகின்றார்கள் என்று கூறினர்கள்.

பின்பு, ஷெ விழாவில் கலந்துகொண்ட திரு. எஸ். நடராஜன் (நஜன்) அவர்கள் பேசுகையில் தான் எழுதிய "சரவண பவ சரணம்" என்றநூலை அறிமுகப்படுத்தி, முருகன், சரவணப்பெருமான், ஷண்முகம், சுப்பிரமண்யம் ஆகிய பெயரின் தத்துவங்கள்பற்றியும், ஞானசக்தியாய்த் திகழும் முருகன் வேல்வைக்கும் சிறப்பைப் பற்றியும், ஸ்ரீ முத்தையாவின் தத்துவங்களைப்பற்றியும் விளக்கிப் பேசினர்கள்.

நிலையசுவாமிகள் நன்றியுரைகூறியபின் எல்லோருக்கும் பிரசாதம் வழங்கப்பட்டது.



# எதிர்காலம்

## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

**சித்தார்த்திஞூ ஆனிமீ 1உ முதல் 31உ முடிய.**

**( 15—6—79 முதல் 16—7—79 முடிய )**

| | | | |
|---|---|---|---|
| | செ | சு | சூ<br>பு |
| கே<br>சந் | இராசி | | கு |
| | | | சனி<br>ரா |
| | | | ல |

ஸ்ரீ சித்தார்த்திஞூ ஆனிமீ 1உ சுக்கிரவாரம் அவிட்ட நக்ஷத்திரம் கரசை கரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 16 நாழிகை 43 விநாடிக்குக் கன்னியா லக்னத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் லோக சுபிட்சார்த்தமாக ரிஷபராசியிலிருந்து மிதுன ராசி சங்கிரமணம் செய்கின்ருர். ஆனிமீ 8உ சுக்கிரவாரம் 17 நாழிகை 51 விஞடிக்குச் சூரியபகவான் திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிரவேசித்து, சித்தார்த்திவருஷத்தின் மேகாதிபதியைஏற்படுத்துவார். மேகாதிபதி சுக்கிரபகவான் ஆவார். ஆனிமீ சங்கிரம கால கிரக ஸ்திதியின் பலனுவது லோக நாடுகளில் எங்கும் சுபிட்சம் நிலவும். பிரஜைகள் தொழில் வளம் பெருக்கிப் பொருளாதார செளகரியங்களை அடைவர். லோக நாடுகளில் ஆளுகைக்கு வந்துள்ள ஜனுதிபதிகள் அமைச்சர்கள் தர்மபரிபாலனம் நடத்தி, பிரஜாநலம் காப்பர். தேசங்களில் ஆங்காங்கும் புதிய தொழில் நிறுவனங்கள் ஏற்பட்டு, இளைஞர்களுக்கு வேலைவாய்ப்புக்கள் கிட்டும். எல்லாத்துறை அரசாங்கஅலுவலர்களும் ஜனசமுதாயத்தின் முன்னேற்ற நன்மைக்கு நீதியுடன் கடமைகளைச்செய்தும், பிரஜா சம்ரக்ஷணுதிகளுக்கு அரும் சேவை நல்கியும் வருவார்கள். தேசங்களில் ஆங்காங்கு ஏற்படுகிற வேலைநிறுத்தம் போன்ற க்ஷீண நிலைமை ஈஸ்வர கிருபையால் நீங்கும்.

எல்லா வகை தொழில்களும் செம்மையாக நடைபெற்று, தேவைப் பொருள்களின் உற்பத்தி பெருகி ஜனங்களுக்கு மலிவு விலையில் கிடைத்து வரும்.

உலகெங்கும் ஏற்பட்டுள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் வந்துள்ள தவத்திரு சிவஞான குருமகான்களின் தெய்வீகத்திருவுளப் பாங்கின் ஆணையில் லோகமெங்கும் தெய்வ புண்ணிய காரியங்கள் இனிது நடைபெறும். அன்னார் விளம்புகின்ற ஞான உரைகளின்படியாக பிரஜாகோடிகள் சிவாசாரநல்வழி கடைப்பிடித்து உயர்வார்கள். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் லோக தர்ம பூசனுதிகள் நியம விதிகளின்படி சிறப்பாக நடைபெற்று வரும். லோகமக்கள் ஈஸ்வர பக்தியுடையவர்களாகி க்ஷேமகரமாக வாழ்வார்கள்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை ¼**

**( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )**

மேஷராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபிவிருத்தியில் மகிழ்ச்சிக்குரிய நிலைமையை ஏற்படுத்தும். தனுதி சௌகரியங்கள் மிகும். சகோதரருக்கு உயர்ந்த நிலைமையை ஏற்படுத்தும். நூதன வஸ்துவில் பிராப்தியை யளிக்கும். வாகன சுகம் திருப்தியளிக்கும். 17உக்குமேல் ரஜஸ் அதிகரிப்பதால் புத்திரபாக்கியம் ஒன்று ஏற் படுதல் ஆகும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஆனிமீ 21உ 56 நாழிகை 13 விஞடி முதல் 24உ 10 நாழிகை 16 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**2, ரிஷபம் :- கார்த்திகை ¾ - உரோகிணி – மிருகசீர்ஷம் ½**

**( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வு - வே. வோ. )**

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் கண்யமாக வந்துகொண்டிருக்கும். சரீரத்தில் பித்தத்தால் நலிவு வந்து குணமாகும். சகோதரர் சகோதரிகளின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். வித்துவத்துவம் கலைத் துறையில் இராஜாங்க புகழ் உண்டாகும். கால்நடை வாகனங்களில் 17உ முதல் சிலாக்கிய பலன் ஏற்படும். தாரபுத்திரர்கள் சௌக்கிய மாக இருந்துவருவார்கள். ஆனிமீ 24உ 10 நாழிகை 16 விஞடி முதல் 26உ 19 நாழிகை 39 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் விழாழன் சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை – புனர்பூசம் ¾**

**( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )**

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் மதிப்பாக வந்துகொண்டிருக்கும்.

சகோதரர் புத்திரர் இவர்களின் சுபத்திற்குச் செலவும் ஏற்படும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் 8உ முதல் பிரபல ஸ்திதியை உண்டுபண்ணும். பூமி பிராப்தியில் பெரும் முதல் முடங்கும். தாம்பத்திய வாழ்க்கை சுமுகமாக நடந்துவரும். ஆனிமீ 26உ 19 நாழிகை 39 விஞடி முதல் 28உ 26 நாழிகை 11 விஞடிவரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் மேலும் மேலும் வந்துகொண்டிருக்கும். நவீன வஸ்துக்கள் வாங்குதல் ஆகும் பிதா அம்மான்களுக்குக் கடமையாற்றும் நிலைமையாகும். பொது நலத்திற்குக் கௌரவச் செலவும் ஆகிக்கொண்டிருக்கும். இராசிக்கு கண் உறுப்பில் எரிச்சல் வலி வந்து உடன் குணமாகும். தார சௌக்கியம் புத்திரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆனிமீ 28உ 26 நாழிகை 11 விஞடி முதல் 30உ 32 நாழிகை 13 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$**

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் இராஜகண்யமாக வந்துகொண்டிருக்கும். சகோதர சகோதரிகளின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வாகன சுகம் திருப்தியளிக்கும். 17உக்குமேல் புத்திரபிராப்தி ஒன்று ஏற்படுதல் ஆகும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஆனிமீ 30உ 32 நாழிகை 13 விஞடிமுதல் 32உ 37 நாழிகை 48 விஞடிவரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் சுபபலனுகநடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு ஸ்திரிமூலிய நன்மைகளை ஏற்படுத்தும். நூதன வாகன பிராப்தியை யளிக்கும். புத்திரர் பௌத்திரர்களுக்கு மேன்மை ஸ்திதி ஏற்படும். தாம்பத்திய வாழ்க்கை தெய்வபக்தியாக நடந்துவரும். ஜீவனேபாய விஷயங்களில் இராஜாங்கநன்மைகளை ஏற்படுத்திவரும். ஆனிமீ 5உ 19 நாழிகை 31 விஞடி முதல் 7உ 31 நாழிகை 35 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ - சுவாதி - விசாகம் $\frac{3}{4}$**

(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். இராசிக்கு ஓர் விபத்து வந்து தப்பும். பிதாவிற்குச் சிரோபாதைபோன்ற உஷ்ண நலிவு ஏற்பட்டுக் குணமாகும். வித்தியாவியாபாராதி கலைத் துறைகளில் 8உ முதல் முன்னேற்ற ஸ்திதியாகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆனிமீ 7உ 31 நாழிகை 35 விஞடி முதல் 9உ 49 நாழிகை 15 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் - கேட்டை.**

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடந்துவரும். குடும்பாபிவிருத்தியில் தன வருமானங்கள் மதிப்பாக வந்துகொண்டிருக்கும். சகோதரர்கள் மாறுதல் பான்மையிலிருப்பதும் சொத்து தகராறுகள் ஏற்படுவதும் காணும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் பிரசித்தமாக இருந்துவரும். உத்தியோகத்துறையில் மறைமுக எதிர்ப்பாளர்கள் இருந்துவருவர் தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆனிமீ 49 நாழிகை 15 விஞடி முதல் 12உ 12 நாழிகை 58 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**9. தனுசு :- மூலம் ; பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$**

(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானம் ஓரளவிற்கு வந்துகொண்டிருக்கும். சகோதரர் பந்து அம்மான்களின் ஒற்றுமை அனுசரணைகள் பலம்தரும். பிதாவின் உடல் நலம் பாதித்து உடன் குணமாகும். 8உ முதல் வித்தியாவியாபாராதி கலைத்துறைகளில் நற்பலன் தரும். புத்திரனுக்குச் சௌக்கிய பலன் தரும். மனைவிக்குச் சாதாரணமாக ஏற்படுகிற சிரோபாதை போன்ற நலிவுகள் உடனுக்குடன் குணமாகும். ஆனிமீ 12உ 12 நாழிகை 58 விஞடி முதல் 14உ 41 நாழிகை 58 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$**

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் சுப பலன் தரும். குடும்பாபி விருத்தியில் நாளுக்குநாள் முன்னேற்றம்காணும். நல்லவிதமாகப் பண வருமா

ணங்களை ஏற்படுத்தி வரும். போஜனுதி சௌகரியங்கள் திருப்தியளிக்கும். சகோதரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வித்தியா வியாபாரம் கலைத்துறைகளில் நன்மதிப்பு தரும். 17உக்குமேல் புத்திர பாக்கியம் ஒன்று ஏற்படுதல் ஆகும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஆனிமீ 14உ 41 நாழிகை 7 விளுடி முதல் 17உ 10 நாழிகை 15 விளுடி வரையில் சந்திராஷ்டமமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

## 11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ - சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$

(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பணச்செலாவணியில் 8உ முதல் திருப்திகரமான நிலைமையை ஏற்படுத்தும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்து வரும். பூர்வசொத்து பிராப்தியில் சிக்கல் வந்து சரிபடும். ஞாயிற்றுக் கிழமை சூரியார்ச்சனை செய்ய அலைச்சல் ஆஜீர்ணம் போன்றவை நீங்கும். தாரபுத்திரர்களுக்குச் சௌக்கியம் தரும். ஆனிமீ 17உ 10 நாழிகை 15 விளுடி முதல் 19உ 36 நாழிகை 4 விளுடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

## 12. மீனம் :- பூரட்டாதி $\frac{1}{4}$ - உத்திரட்டாதி - ரேவதி.

(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)

மீனராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபிவிருத்தியில் போதிய பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். போஜனுதி சௌகரியங்கள் திருப்திகரமாக இருந்துவரும். சகோதரர்கள் சௌக்கிய மேன்மையில் இருந்து வருவர். வித்தியா வியாபாராதிகளில் அரசாங்க அனுகூலங்கள் ஏற்படும். புத்திரனுக்கு முன்னேற்ற நிலைமையை ஏற்படுத்தும். மனைவிநலம் சாதாரணமாக இருந்துவரும். ஆனிமீ 19உ 36 நாழிகை 4 விளுடி முதல் 22உ 4 நாழிகை 22 விளுடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

---

# அன்னம்பாலிப்பு

தருமையாதீனஸ்தாபகர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜைத் திருநாள் 17—5—79 வியாழக்கிழமையன்று சிதம்பரம், திருவாரூர், திருநெல்வேலி, மதுரை, ஸ்ரீவில்லிபுத்தூர், சிவசைலம், இராமேசுவரம், திருக்கேதாரம், காசி ஆகிய தலங்களில் ஏழைகட்கு அன்னம்பாலிப்பு நடைபெற்றது. ஆங்காங்கும் அறிஞர்களைக்கொண்டு சமயவிரிவுரைகளும் நிகழ்த்துவிக்கப்பெற்றன.

# ஆனி மாதச் சிறப்பு நாட்கள்

15—6—79 வெள்ளி, ஷடசீதி புண்யகாலம் மிதுனரவி 16-43 திருவையாறு மாதப்பிறப்பு தீர்த்தம்.

17—6—79 ஞாயிறு, காளாஷ்டமி.

21—6—79 வியாழன், தருமபுரம் சண்முகர் கிருத்திகை அபிஷேகம், கிருத்திகை விரதம்.

22—6—79 வெள்ளி, வேளூர் மண்டலாபிஷேகக் கிருத்திகை பிரதோஷம், மாதசிவராத்திரி, சிதம்பரம், ஆவுடையார்கோவில் ஆனித்திருமஞ்சன உத்ஸவாரம்பம்.

23—6—79 சனி, போதாயன அமாவாசை

24—6—79 ஞாயிறு, அமாவாசை.

28—6—79 வியாழன், 19 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை, 23 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

29—6—79 வெள்ளி, ஸ்ரீ மாணிக்கவாசகர் குருபூஜை.

30—6—79 சனி, அமர்நீதி நாயனுர் குருபூஜை.

1—7—79 ஞாயிறு, ஆனித்திருமஞ்சனம். ஸ்ரீ நடராஜர் அபிஷேகம். மாயூரம் - வள்ளலார்கோவில் ஸ்ரீ வதான்யேசுவர சுவாமி சம்வத்ஸராபிஷேகம். 3 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்ததேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

4—7—79 புதன், திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

9—7—79 திங்கள், பௌர்ணமிபூஜை விரதம், மாதபூஜையில் முப்பழம் சாத்துதல், காரைக்கால் மாங்கனி உற்சவம். யஜுருபாகர்மா.

10—7—79 செவ்வாய், திருக்கடவூர் முனீசுவரபூஜை.

11—7—79 புதன், வைத்தீஸ்வரன்கோயில் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

12—7—79 வியாழன், திருப்பறியலூர் ஸ்ரீ வீரட்டேசுவர சுவாமிக்கும், திருக்குவளை ஸ்ரீ பிரமபுரீசுவர சுவாமிக்கும் சம்வத்ஸராபிஷேகம், சங்கடஹரசதுர்த்தி.

15—7—79 ஞாயிறு, மாயூரம் காசிவிசுவநாதசுவாமி கோயில் ஸ்ரீ காசிவிசுவநாதசுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

16—7—79 திங்கள், கடகரவி 53-21. தக்ஷிணாயன புண்யகாலம், திருவையாறு தீர்த்தம், சீகாழியில் உச்சிக்காலத்தில் புழுகாப்பு, திருக்கடவூர் ஸ்ரீ காலசங்காரமூர்த்தி அபிஷேகம், காளாஷ்டமி. ஏயர்கோன் கலிக்காம நாயனுர் குருபூஜை.

மதிப்புரை

# புதுமைக் குறள்

ஆக்கியோர் செஞ்சொற் கொண்டல், டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., துணைத் தமிழ்ப் பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மாயூரம். ஞானவேல் பதிப்பகம், 2. மாயூரநாதர் சந்நிதித் தெரு. விலை ரூபா. 2—00.

**"புதுமைக் குறள்"** என்னும் இந்நூல், திருவள்ளுவரது திருக்குறளோடு பல வகையில் ஒப்புமைபெறச்செய்யப்பட்டது என்பது பெயரிலிருந்தே நன்கு விளங்குவதாகும். புதுமை; இதன் தோற்றக் காலம்பற்றியே முற்றப்பொருந்துகிறது. பிற வகையில் இது பழமையையும் உடையதே.

திருக்குறளோடு ஒப்பச் செய்தலைக் கருதினமையால், யாப்பு வகை, அதிகார அமைப்பு, அவற்றில் உள்ள பாட்டுக்களின் எண்ணிக்கை இவற்றைப்பற்றிய சில வரையறைகளை இதன் ஆசிரியர் தாமே வகுத்துக்கொண்டு, அவ்வரையறைகட்கு உட்பட்டு இந்நூலை ஆக்கியுள்ளார்.

பழமைக் குறளாகிய திருவள்ளுவர் குறள், தொன்னூல்களின் துணிபையும், தொல்லாசிரியரது மரபினையும் ஆடிநிழலின் அறியக் காட்டுவது. அதுபோல இப்புதுமைக் குறளின் பொருள்நிலையைச் சுருங்கக் கூறின் இன்றைய இந்திய நாட்டின் அரசியல் நிலையையும், சில கவர்ச்சிக்குரல் ஓசைகளையும் பிரதிபலித்து நிற்கின்றது என்று கூறிவிடலாம்.

இன்றைய இந்தியநாட்டின் நிலைக்கு இப்புதுமைக் குறள் உண்மையில் புதுமைக் குறளாகவே விளங்கிப் பலர்க்கு மகிழ்வை ஊட்டுவதாகும். புதுமையாய்த் தோன்றுவன காலப் போக்கில் பழமையாய் விடுதலும் இயல்பாதலின், இப்புதுமைக் குறளும் பின் ஒருகாலத்தில் பழமையாகலாம்.

**மரக்கறி உணவின் மாண்பினை** இன்றைய அரசே ஏற்றுக்கொள்ளுதல் அருமை. **மூலநூல் பயிலல், கல்விநிலைய ஆட்சியர், பத்திரிகை அறம்** போன்றவை இக்காலத்தில் புதியனவாக வேண்டப்படும் அறிவுரைகள். அவற்றை இப்புதுமைக் குறள் நன்கு உரைக்கின்றது.

இதன் பதிப்புமுறையும், அழகும் அணிந்துரையிலும் பாராட்டப் பட்டுள்ளன. எனினும், பிழைதிருத்தப் பகுதியும் இடம்பெற்றுள்ளது. இக்காலப் பதிப்புக்களில் இன்றியமையாது கொள்ளப்படும் பாட்டு அகர வரிசை இதில் காணப்படவில்லை.

பொதுவாக இக்காலத்திலும் இதுபோன்ற பெருநூலை இயற்ற வல்லுநர் உளர் என்பதற்கு இஃது ஒரு சான்றாய் இருப்பதுடன், இக்கால மக்கட்கு ஏற்றதோர் அறிவு நூலாகவும் இது திகழ்வதாகும்.

துணையாசிரியர்.

Printed & Published by V. Ramaiah Pillai Manager Dharmapuram Adhinam.